உ

கணபதி துணை.

# விதி விளக்க விஷய

# அட்டவணை.







# விளம்பரம்.



இப்புத்தகம் வேண்டியவர்கள் அடியில்கண்ட விலாசத்திற்கு முன்பணம் செலுத்தி பெற்றுக்கொள்ளலாம். வி. பி. யில் அனுப்புவதில்லை.

சோதிட சாஸ்திரத்தில் நம்பிக்கை யில்லாதவர்களும், சோதிடத்தில் உண்மையில்லை என்று கைவிட்டவர்களும், சோதிட சாஸ்திரம் கற்று அதினால் பிரயோசனமடைய விரும்புபவர்களும், இந்த விதிவிளக்க மென்னும் சோதிட சாஸ்திரத்தை வாங்கி அவசியம் வாசித்துப் பார்க்க வேண்டியது.

விலாசம்:—

மிட்டா - முனிசாமி செட்டி, B. A.

நெ. 41, செங்கழுநீர் பிள்ளையார் கோவில் தெரு,

மண்ணடி, மதருஸ்.

உ

கணபதி துணை.

# விதி விளக்கம

## முகவுரை.



இப்புத்தகமானது, சாதாரணமாக சோதிட சாஸ்திர புத்தகங்களைப்போல் அல்லாமல், இக்காலத்திற்கு கல்வித் திறத்திற்கு ஏற்றபடி முதியோர், சிறுவர், சிறுமிகளுக்கும் எளிதில் விளக்கமாகும் பொருட்டும், சோதிட நூல்களின் சில முக்கிய அம்சங்களின்பேரில் ஆராய்ச்சி செய்ததின் பயனை திரட்டி, இன்னும் அனேகர் பலர், பல இடங்களி லும், இப்புத்தகத்தில் கண்டிருக்கும் விஷயங்களைக்கொண்டு மேன்மேலும் ஆராய்ச்சி செய்ய முயற்சி உண்டாகும் பொருட்டும், எழுதப்பட்டுள்ளது. இன்னும் இப்புத்தகத் தில் காணாத சில குறிப்புகளும், ஆராய்ச்சியில் ஏற்பட்ட சிறப்பு விதிகளையும் வெளியிடவில்லை. இப்புத்தகத்தில் கண்ட விஷயங்களைப்பற்றியும், அதில் கண்டிருக்கும் ஆராய்ச்சியின் பொதுவிதிகளின் பயனையும் வாசித்த பொதுஜன அபிப்பிராயம் தெரிந்து, பிறகு வெளியிடலாமென் றிருக் கிறேன்.

இப்புத்தகத்தில் அடங்கிய விஷயங்கள் அவ்வளவும், முன்னோர் சாஸ்திரத்தின் பேரிலும், ஜாதகத்தின்பேரிலும், செய்த ஆராய்ச்சியில் ஏற்பட்டவை. ஜோதிட சாஸ்திரம்

கற்றுக்கொள்வது சுலபமாக தோன்றினபோதிலும், சரிவர நடப்பு பலனை யூகிப்பது, சாமான்யம் அல்லவென்று, எல்லோரும் தெரிந்த விஷயம். நம் இந்துக்களில், அனேகமாக இச்ஜோதிட சாஸ்திரம் தெரியாதவர்கள் மிக சிலர்; ஆனாலும் சூரியபிரகாசம், ஜலம், காற்று இவைகள் நமக்கு பிரயாசை இன்றி எவ்வளவு வேண்டுமென்றாலும் கிடைத்தாலும், அவைகளை சரிவர உபயோகித்து நாம் ஆயுளை விருத்திசெய்துக்கொள்வது அசாத்தியமாக இருக்கிறது. அதுபோல் இச்சோதிடம் எவ்வளவு சுலபமாக தோன்றின போதிலும், அனேகவிதமான சந்தேகங்களை உண்டு பண்ணுவதால், ஆங்காங்கு இப்புத்தகத்தில் மேற்சொல்லியதை மறுபடியும் சொல்லவேண்டி இருப்பதை, விஷயத் தெளிவுக்காக காட்டியிருக்கிறதென்று, இதை வாசிப்போர் அங்கீகரிக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்ளப்படுகிறது.

இதுவரையிலும் ஜோதிட சாஸ்திரம், இந்துக்களில் முக்கியமாக அனுஷ்டிக்கப்பட்டு வருகிறது. ஆனால் விதி விளக்கத்தில் கண்டிருக்கிற விஷயங்களால், இச்சாஸ்திரம், பிரபஞ்ச சிருஷ்டியில் அடங்கிய எல்லா மானிட பிரஜைகளுக்கும் உபயோகமாகுமே ஒழிய ஒரு ஜாதியர், ஒரு மதஸ்தர் இவர்களுக்கு மாத்திரமல்ல. ஆகவே இவ்விதிவிளக்கம் ஜாதிமதபேத பற்றில்லாமல் பொதுவாக தெய்வமகிமையைக் கைப்பற்றியே எழுதப்பட்டுள்ளது. இனியாவது தமிழறியும் மகம்மதியர், கிருஸ்துமதஸ்தர், ஜெயினியர் பாரசீகர்முதலிய அன்னிய மதஸ்தர்களும், இதை கவனித்து தங்கள் தங்கள் மதக்கோட்பாடுக்கு விரோதமின்றி அனுசரிக்க வேண்டும். இதை எல்லோரும் பொதுவாக அனுசரிப்ப தவஸ்யம்.

மதக்கோட்பாடுபடி, நவக்கிரக சக்தியை அனுசரிப்பது கூடாதென்றால், இந்துக்களைப்போல, அவைகளை தெய்வமாகவும் அவைகளுக்கு தெய்வீக சக்தியுண்டென்றும் நம்பாமல் இருக்க வேண்டியதென்று நிபந்தனையே ஒழிய, அவைகள் நம்மை இயக்குவதில்லை யென்றும், அவைகளுக்கும் நமக்கும் யாதொரு சம்பந்தமும் இல்லையென்றும், அபிப்பிராயமல்ல. அவ்வித அபிப்பிராயம் அன்னிய மதஸ்தர்கொள்ளும் பட்சத்தில், அவர்கள் கவனிக்கவேண்டிய தென்ன வென்றால், பிறந்த மணி தேதி இடம் இவைகளால் ஏற்பட்ட ஜாதக கிரகநிலை என்னவென்றும், அதின்படி தங்களுக்கே ஏற்படும் பலன்கள் என்னவென்றும், கவனித்தால் நவக்கிரக சக்தியினால் நம்பூலோகத்தில் நமக்கு ஏற்படும் பயன் விசிதமாகும். அப்படிகண்டறிவது அவசியம். இவ்வாறு, அவைகள் நம்மை இயக்கும் மார்க்கம் கண்டறிந்தால்,நன்மைக்கு மேன் மேலும் முயற்சிசெய்ய மார்க்கமுண்டு. இதை ஐரோப்பா அமெரிக்கா இவ்விடங்களில் கண்டறிந்து மேன்மேலும் இன்னும் ஆராய்ச்சி செய்கிறார்கள் என்பது அனேகருக்கு தெரிந்த விஷயம். நம்புத்திக்கும் சக்திக்கும் அடங்காத அனேக லௌகிக சம்பவங்கள், அனுபவங்கள், நவக்கிரகங்களால் உண்டாக்கப்பட்டவையே. இதை யாரும் நிக்கிரகிக்கக் கூடாது. அப்படி இந்த நவக்கிரகசக்தியை கவனிக்காமல் வாழ்நாள் கழிப்பதில் பலனில்லை.

கிரந்தகர்த்தா.



கணபதி துணை.

# சிறு விண்ணப்பம்.



## திருவாசகம்—திருவெண்பா.

*இன்பம் பெருக்கி யிருளகற்றி யெஞ்ஞான்றும்*
*துன்பம் தொடர்வறுத்துச் சோதியா—யன்பமைத்துச்*
*சீரார் பெருந்துறையா னென்னுடைய சிந்தையே*
*ஊராகக் கொண்டா னுவந்து.*

சோதிடப் பொருளுணர்த்தும் நூல்கள் ஒன்றோ டொன்று ஒவ்வாமல் பலஉள; இவற்றுள் யாது உண்மைப் பொருள்நூல் என்று ஆராயுங்கால், இதுவாகும் அதுவல்ல என்று கூறத் தற்காலத்தில் இயலாமையால் பெருந்துறை யான் அன்பின் பேருதவியால் உண்மைகண்டறிய அனேக காலமாக ஜாதகக்குறிப்பின் உதவியாலும், மற்ற நூல்களின் உதவியாலும் விடா முயற்சிகொண்டு பலவாறாக ஆராய்ச்சி செய்து ஏற்பட்ட விஷயங்களை, ஒருவாறு சேர்த்து வெளி யிடலானேன். இன்னும் இதில் கண்டறியப்பட்ட விதிகளைக் கொண்டு அனேகர் பலவிடங்களிலும் ஆராய்ச்சிசெய்து சோதிடநூலைப் பூர்த்திசெய்யும் பொருட்டு நவக்கிரக தத்து வத்தைக் கண்டறிவார்கள் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

இதில் அடங்கிய விஷயங்கள் சாதாரணமானவைக ளாகவும் சுலபமாகவும் அதிக கணித முயற்சியின்றிக் காணக்

கூடியதாக இருந்தபோதிலும் அலட்சியம் செய்யாமல் ஒவ்வொருவரும் தங்கள் தங்கள் சக்திக்குத் தக்கவாறு தங்கள் ஜாதகத்திற்கே அமைத்து நாளடைவில் இவ்விதிகளைப் பரிசோதித்துப் பிறகு இதின் விசேஷத்தை யூகிக்கவேண்டியது.

## அகவல்.

மாநிலத் துதித்த மானிடர்க் கெல்லாம்
உயிர்உடல் நிலையிய கதியது விதியே
விதிவழி மதியென மதித்த மாந்தர்காள்!
விதியது மதியைத்தன் பாற்பட இயக்கும்
விதியின் இயல்பினை முதியினர் கலிமுதல்
அனுபவத் திரட்டின் வரையறை கண்டு,
கதிர்மதி கதியின் முதிர்திதி யோகம்
வகுத்தனர் விதித்தன ராகிய நன்னூல்
ஜோதிட மறையில் மறைதிரை அகற்றி
ஊழால் உயர்ந்தோர் ஊழால் தாழ்ந்தோர்
எதிர்கால் வினைபயன் காணுது காண்பான்
விளங்கச் செய்வது விதிவிளக் கம்மே.

மிட்டா. முனிசாமிசெட்டி, பி. எ. (1897)

# விதி விளக்கம்.



## 1 - ஆம் அத்தியாயம்.



*ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று*
*சூழினும் தான்முந் துறும்.* —திருக்குறள்.

விதி விளக்கமாவது விதியை விளங்கச்செய்வது; விதி யாவது மதிக்குப் புலப்படாத மகிமையுடைத்தாய், மதியினால் இதுதான் என்று மதிக்கக்கூடாததாய், கடவுள் செயல் என்று சுயமுயற்சியையும் கைவிட்டு, வருவனவற்றை வாழ்நாள் வழிபாடு என்று கருதி நாள்கழிப்பதே விதி என்று சொல்லும் வாழ்நாள் இயல்பு. இதை ஒருவாறு அறியும்படி அனேக தமிழ், தெலுங்கு, ஸம்ஸ்க்ருத முதலிய சாஸ்திரங்கள் நம்முன்னோர் விடாமுயற்சிகொண்டு அனேக விஷயங்கள் அடங்கியனவாய், மானிடருக்கு உபயோகப் படும்பொருட்டு ஏற்படுத்தி இருக்கிறார்கள். அவைகளில் ஜோதிடம் ஒன்று. இச்சோதிடம் அறிவுக்குப் புலப்படாத அளவற்ற ஆகாச நிலையில் சஞ்சரிக்கும் அதிப்பிரகாசம் பொருந்தினவைகளான நவக்கிரகங்கள், அளவற்ற தூரத்தில் இருந்துகொண்டு இப்பூவுலகில் சராசரமனைத்தையும் திரிமூர்த்திகளுடைய திரிவித கிர்த்தியங்களைச் செய்துகொண்டு வருகின்றன. அத்திரிவித கிர்த்தியங்களாவன:— ஆக்கல், வளர்த்தல், அழித்தல் என்பன. ஆன்மகோடிகள் பிறத்தல்,

வளர்தல், இறத்தல் என்னும் முக்குணம் வாய்த்தனராய், மேற்சொல்லிய நவக்கிரகங்களால் பலவாறு பிராரத்துவ புண்ணிய சுடுபோல் இயக்கப்பட்டு, ஜனித்து வளர்ந்து சுகதுக்கங்களை அனுபவித்து தங்களுக்கு விதித்திருக்கும் அளவு ஜீவித்து மாண்டு வருகின்றனர். இவ்வித ஜீவித மரண வாழ்க்கையின் தத்துவத்தை விளங்கச் செய்வதும் வாழ்நாளின் வழிபடுபலனை யூகிப்பதும் சோதிடம்.

இதுகாறும் இச்சோதிட சாஸ்திரத்தின் தெய்வீக மகிமையுள்ள சகல நாடிக்கிரந்தங்களே சிரேஷ்டமாய் அங்கீகரிக்கப்பட்டு வருகினறன. நாடிக்கிரந்தங்களில் கிடைக்காத விஷயங்களைப்பற்றியே சோதிட நூல்களாகிய அலங்காரம், சிந்தாமணி, குமாரசுவாமியம், கேரளம் இவைகளைப் பிழையறக் கற்று அவைகளின் பொருளைத் தெளிந்த ஜோதிடர் ஜாதகம் பார்த்து சொல்வது இரண்டாவதுதறமான யோக்யதை பொருந்தினவாகக் கொள்ளப்படுகின்றன. ஆனால், நாடிக்கிரந்தங்கள் தெய்வீக மகிமையுள்ளபோதிலும் அவைகள் அனேகவிதங்களில் நமக்குப்பூரணமாக உதவுகிறதில்லை. இது விஷயம் ஒவ்வொருவருடைய அனுபவமே. இதின் காரணம் கீழே விவரிக்கின்றனன்.

நவக்கிரகங்களும் அவைகளுக்கும் அமைந்துள்ள ஒயாத மாயா சரகதியினால் பன்னிரண்டு ராசிகளிலும் ஒருகாலத்தில் ஒரு ஜாதகத்தில் ஒருவாறு, அமைந்துள்ளதாகக் கொள்வோமாகில், அதே நிலையில் "ராசியில்" பின்னொருகாலத்தில் சரகதியினால் அமையக்கூடும். ஆனால் இந்த நவக்கிரகங்கள் நட்சத்திர நிலையிலாவது (அல்லது அம்ச நிலையிலாவது) வருவது அசாத்தியம். இதுவே சிருஷ்டியின் மகிமை. இப்படிக்கு அமையக்கூடும் பட்சத்தில் முன்னொருகாலத்தில் ஜெனித்தமனிதன் மற்றொரு

காலத்திலும் உற்பவித்ததாக ஏற்படும். ஒவ்வொருவருடைய அனுபவத்திலும், சுருதி ஸ்மிருதிகளுடைய சாக்ஷியத்திலும், இவ்வாறு நேரிட்டதாக ஏற்படவில்லை. ஆகையால் நாடிக்கிரந்தங்கள் ஸ்தூல பலனில் மாத்திரம் நமக்கு உபயோகமேயொழிய, நித்திய அல்லது மாசத்திய அல்லது வருஷத்திய பலன் இவைகளை அறிய இடங்கொடுக்கா. அல்லாமலும், ஒரு மானிடரைப்போல் இன்னொருவர் சகலவிதத்திலும் ஒத்தவராய் ஜெனித்தல் அரிது. நவக்கிரகங்களும் ஒவ்வொரு வேறு வேறு நிலைமையுள்ளனவாய் சஞ்சரிக்கும் அற்புதம் சிருஷ்டியின்மகிமை. 12-ராசிகளில் ஒருவகையில் நவக்கிரகங்கள் ஒருகாலத்தில் அமைந்து அதே நிலையில் மற்றொருகாலத்தில் ராசியிலும் நட்சத்திர நிலையிலும் அமைவதில்லை. இன்று இருக்கப்பட்ட நிலையில் 10000, வருஷம் சென்றாலும் அமைவது அசாத்தியம்.

அவ்வாறு சிருஷ்டி அமைப்பு இருப்பதினால், அவரவர்களுக்கு நித்திய அல்லது மாசத்திய அல்லது வருஷத்திய பலனை யூகிப்பதற்கு ஜோசியர் அவசியம். நாடிக் கிரந்தங்கள் முழுமையும் உபயோகப்படமாட்டா. ஏனெனில், ஒருவர் ஜெனித்த காலத்தில் ஏற்பட்ட கிரக நிலை மற்றொருவிசை சிருஷ்டியில் ஏற்படப்போகிறதில்லை. இது திண்ணம். அல்லாமலும், ஜனித்தகாலத்தில் இருக்கப்பட்ட கிரக நிலைக்கும், அப்போதைக்கப்போது நாளுக்கு நாள் அமையும் நிலைமைக்கும், ஒருவித சம்பந்தத்தினால் வேறு வேறு பலன்கள் நடந்துகொண்டு வருவனவற்றை நாம் கண்ணாரக்கண்டோம்: ஆனால், ஜெனனகால கிரகநிலைக்கும், தற்கால கிரகநிலைக்கும் இருக்கப்பட்ட நிலைமை யூகித்துப் பலாபலனைக் கண்டறிவதே ஜோசியர் முக்கிய கவனிப்பு. ஆகையால் ஜோசியர் அத்தியாவஸ்யம்.

தற்கால அனுஷ்டான ஜோசியம், சரிவர ஆன்மகோடி களுக்கு நடவடிக்கை முறைப்படி தீர்க்கமாய்கண்டறிய அதிக மாகப்பயன்படவில்லை. ஏனெனில், திதியினுல் ஏற்படும்ஜாதக பலா பலன்கள் இன்னதென்று தெரியாமையால்தான். நம் முன்னோர்கள் நாம் இறந்தால் திதியை அனுஷ்டிக்க வேண் டுமென்றும், விரதாதிகள் எல்லாம் அனேகமாய் திதியை அனுஷ்டித்தே வைக்கவேண்டு மென்றும், திதிக்கும் நட்சத் திரத்திற்கும் இருக்கப்பட்ட பேதத்தில் திதியே முக்கிய மென்றும் அனுஷ்டானவிதியில் காட்டி யிருக்கிறார்கள். ஜெனனகாலமுதல் ஜீவித காலம் வரையில் நட்சத்திரம் முக் கியமென்றும், அதுபற்றி பெயரிடுவதும் விசேஷகாலங்க ளில் நட்சத்திரத்தை அனுஷ்டிப்பதும் இறந்ததுமுதல் திதி விசேஷ மென்றும் நாம் அனுஷ்டான வகையில் கவனித்து வருவது எல்லாருக்கும் தெரிந்த விஷயம். ஆனுல் திதியி னுல் ஏற்படும் பலாபலத்தின் விசேஷம், ஜாதகத்தில் அனுஷ் டிக்கிறதில்லை. இப்படி அனுஷ்டிப்பதுதான் சரியான ஜாத கம் பார்க்கும் முறையென்று போதிக்கும் ஜோதிட கிரந் தங்களும் கிடையா. ஆனுல், ஆராய்ச்சியில் ஏற்பட்ட என் னுடைய அபிப்பிராயம் யாதெனில், திதியைக்கொண்டே நாடிக்கிரந்தங்கள் எழுதப்பட்டிருக்க வேண்டும் என்பதே. நான் இதுவிஷயமாக அனேககாலங்களாக யூகித்துக் கண்ட றிந்த விஷயம் இதுவே. இப்படியாக திதியைப்பற்றி பலா பலன்களைக் கவனிக்கும்போது ஏற்படும் பலன்கள் வேறு. நவக்கிரகங்களையும்தற்கால திசை புக்தி அந்தரம் இவைகளைக் கவனித்து யூகிக்கும் பலன்கள் வேறு; ஆனுல், திதியைக் கவ னித்துத் தற்கால திசைபுத்தி அந்தரங்கள் இவைகளை கவ னித்துப் பலனை யூகிப்பதில் சிலமுக்கிய பலன்கள் கரதலாமல கம்போல் விளங்கும். இப்பலன்களில் தவறு அனேகமாய் ஏற்படுகிறதில்லை. இதுவே இத்திதியால் சோதிடத்திற்கு

ஏற்படும் விசேஷ உதவி; இது இன்றியமையாதது. நாடிகிரந்தங்கள் எழுதிய மஹரிஷிகளுக்கு இதுவே முக்கிய விஷயமாக இருந்திருக்க வேண்டும். ஆனால் முக்கியமான இவ் விஷயம் தற்காலம் மறைந்திருப்பது. அனேகமாக நம் முன்னோர் சாஸ்திரம் மறைந்ததுபோல இதுவும் மறைந்து விட்டது. இது விஷயமாகக் கிரந்தங்கள் இருப்பதாகவும் தெரியவில்லை.



# 2 - ஆம் அத்தியாயம்.

ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று
சூழினும் தான்முந் துறும். —திருக்குறள்.

சிருஷ்டியின் அமைப்பினால் நவக்கிரகங்களுக்கு ஏற்பட்ட சரகதி இருந்தும், பூமிக்கும் நவக்கிரகங்களுக்கும் இருக்கப்பட்ட அதிக அளவுகடந்த விஸ்தாரமான ஆகாசத்திலும், மனதுக்கிவ்வளவு மைல் தூரம் என்று எண்ணிக்கைக்கும் உட்படாத தூரத்தில் இருப்பதினால், அந்த நவக்கிரகங்கள் ஏறக்குறைய ஒரே ஸ்தானத்தில் இருக்கின்றனவாக நம்கண்ணுக்குப் புலப்படுகின்றன. இவ்வாறே நவக்கிரகங்களும் தங்களுக்கு அமைந்துள்ள காலவகைபோல் சூரியனைச் சுற்றிவருகின்றன. அப்படிச் சுற்றி வருவதினால் வேறுவேறு நிலைமைகளை நிமிஷத்திற்கு நிமிஷம் அடைவதுடன், தாம் ஒன்றுக்கொன்று இருக்கும் நிலைமையும் அவ்வாறே வேறுபட்டு வருகின்றன. இதுவிஷயம் நன்றாய் கவனிக்கப்படுவது அவஸ்யம். பூமிக்கு வெகு அருகாமையில் இருக்கப்பட்ட சந்திரனுக்கும் பூமிக்கும் இருக்கப்பட்ட சரகதியினால் உண்டாகும் வளர்பிறை தேய்பிறை என்கின்ற தோற்றமும், சந்திரன் எவ்வளவு பிரமாணமான ஒளியோடு பூமியை அப்போ

தைக்கப்போது இயக்குகிறான் என்பதும் காண்கிறோம். நம்முன்னோர்கள் சாஸ்திரங்களில் வளர்பிறைச் சந்திரன் வலிவென்றும், யோகத்திற்கு முக்கியமென்றும், வளர்பிறைச் சந்திரன் யோகத்தை வளர்ப்பிக்கின்றான் என்றும், தேய் பிறைச்சந்திரன் யோகத்தை வரவர மட்டுப்படுத்துகின்றான் என்றும் போதிக்கின்றார்கள். ஆனால், தீர்க்கமாகச் சகலவித அனுபோகத்தைக் கவனிக்கும்போது, தேய்பிறையில் கூட அரசன் ஜனிக்கிறான் என்றும், அரசாட்சிக்குக் கீழ்த்தற மான யோகத்தில்கூட மந்திரிபிரதானிகள் உண்டாகி யிருக்கின்றார்கள் என்றும் ஏற்படுகின்றன. இதன்றி, வியா பாரிகளும் தனிஷ்டர்களும், மஹா பண்டிதர்களும், தேய் பிறையில் பிறந்து நல்ல யோக, போகபாக்கியத்தை அனு பவித்த தாகவும் தெரிகிறது. ஆகையால், வளர்பிறை என் றும் தேய்பிறை என்றும் பிரித்து யோகத்தை நிதானிப் பது அவ்வளவு சரியான மார்க்கமாகத் தோன்றவில்லை. இதல் லாமல் உண்மையான அனுபவத்தில், தேய்பிறையானு லும், ஒருவன்பிறந்தகால திதியினால் வளர்பிறை பலன் உண்டாக வேண்டுமென்றும் ஏற்படுகிறது; ஆனால், முகூர்த் தத்திற்கும் மற்றைய சுபங்களுக்கும் அனுஷ்டானத்தில் வளர் பிறையைக்கொண்டு நாள் குறிப்பது வழக்கம். சிருஷ்டி யின் ரகசியமும், நவக்கிரகங்களின் ரகசியமும் தெரிகிற வரையில் நாம் தேய்பிறை என்று தள்ளுவதானது கார ணந்தெரியாமல், "நல்வழிகடைப்பிடி, நாடொப்பனசெய்" என்று சொல்லப்பட்ட நீதிமொழிபோல் நடப்பனவாகுமே யொழிய, சிறந்த ஜோதிட நூல் புகட்டும் உண்மையான ஜீவகசாஸ்திர நீதியாக கொள்ளக்கூடாது. அப்படி கொள்ளும் பட்சத்தில் சிருஷ்டியில் சிறந்த யோக்யதா பட்சம் அமைந்துள்ள மஹாத்மா காந்தியும் தேய்பிறையில் பிறந்திருப்பதாகத் தான் தெரிகின்றது; ஆகையால், சிருஷ்டி

யில் நமக்குப் புலப்படும் நவக்கிரகங்களும் பட்சபாதம் இல்லாமல் பிராரத்துவ புண்ணியபாவ ஈடுபோல், சுபர்களாகவும் பாபர்களாகவும் நல்ல பலனைக் கொடுக்கின்றார்களே யொழிய, கெட்டபலனைக் கொடுக்க தேய்பிறை ஜனனமும் சனீஸ்வரரும் என்பதும், நல்ல பலனைக்கொடுக்க குரு சுக்கிரபகவான் என்பதும் வளர்பிறை ஜனனமென்பதும் பிசகு. சில திதிகளில், குருபார்வையுடன் வைக்கப்பட்ட சுபகாரிய முகூர்த்தமும், சுபங்களும், நடவாமல் அதே லக்கினத்தில் அதிகமான கெட்டபலன் நடந்திருக்கிறதையும் நான் ஆராய்ச்சியில் பார்த்திருக்கின்றேன். இதின் ரகசியம் தெரியாமல் குருபார்வையுடன் வைக்கப்பட்ட லக்கினத்தில் ஒரு விவாக சுபம் நடைபெறுமல் தவறிவிட்டதை நான் கண்டிருக்கின்றேன். அப்படி தவறின முகூர்த்தத்திற்குப் பஞ்சகம் தாராபலன் சந்திரபலன் எல்லாம் ஒத்திருந்தன, ஆனால், திதியினால் குரு குரூரனாயினார். ஆகையால் பார்வையினால் விவாகமுகூர்த்தம் நடைபெறவில்லை. பிறந்த திதி நட்சத்திரம், இடம் இவைகளால், சனீஸ்வரன் யோகத்திற்குக் கர்த்தாவாகவும், அவர் திசையில் அபரிமிதமான யோகமும், குருபகவானவர் கொடிய அவயோகத்தையும் நித்திய வறுமையும் அவர்திசையில் கொடுத்ததையும் கண்டிருக்கின்றேன். இவைகளுக்குக் காரணம் தற்கால ஜோதிடரைக் கேட்கும்பட்சத்தில் பலவாறாகச் சொல்லி முடிக்கிறார்களே யொழிய, இதற்கு உண்மையான காரணம் தெரிவிக்கிறதில்லை. ஏனெனில், திதியினால் ஏற்படும் கிரகதீது, ராசிபாவதீது, பார்வைதீது இவை கண்டறிந்தவர்களாகத் தெரியவில்லை. நாடிக்கிரந்த கர்த்தாக்கள் இதின் ரகசியத்தை நன்கு கண்டறிந்தவர்களாக இருக்கவேண்டும். ஏனெனில், நவக்கிரக திதி நட்சத்திரங்கள் ஒரு நிமிஷத்தில் இருக்கப்பட்டதை யூகித்து

மானிடர் ஜனிக்கலாம், மிருகம் ஜனிக்கலாம், விருக்ஷம் ஜனிக்கலாம் என்று அறியக்கூடியவர்களாக இருக்க வேண்டும். அவ்வளவு தேர்ச்சியும் நுண்ணறிவும் இல்லாவிட்டால், நாடிச்கிரந்தம் எழுதமுடியாது. அதின் ரகசியத்தைத் தக்கோர் ஆராய்ச்சியினாலும் பலர் பல இடங்களிலும் செய்யும் ஆராய்ச்சியினாலும், நமக்கு ஏற்பட்டு விடும். இப்படி ஏற்படும்பட்சத்தில் ஜோதிடசாஸ்திர உண்மை நமக்கு ஏற்பட்டுவிடும் என்பதற்கு ஐயமில்லை.

அப்படி சோதிடசாஸ்திர உண்மை நமக்கு ஏற்படும் பட்சத்தில், அதனால் நமக்குப் பயன் என்ன வென்றால், நவக்கிரகங்களின் செயல் அறிந்து, இந்த நிலையில் இந்தப் பலன் உண்டாவது என்று கண்டறியலாம். அப்படி கண்டறிந்தால், இன்ன காலத்தில் இன்ன மணிநேரத்தில் இன்ன இடத்தில் நவக்கிரகங்கள் நம் நன்மைக்கு அதாவது அபீஷ்ட பிராப்திக்கு அனுகூலமான நேரம் இதுவென்று கண்டறியலாம். அப்படி அறிந்த பிறகு நம் வாழ்நாளில் நமக்கு இயற்கையாக அமைந்துள்ள கெட்ட பலனினின்று நீங்கச் சில அனுஷ்டானங்களைச் செய்து நம் இஷ்டம் பூர்த்தி செய்யலாம். இதின் தத்வம் ஒவ்வொருவருக்கும் அனுபவத்திலும் அனுஷ்டானகால முடிவிலும் ஏற்படக்கூடிய விஷயமாகையால் இதைப்பற்றி அதிகமாக எழுதுவது அனாவசியம். சிருஷ்டியின் அற்புதம் இதுதான் ஸ்தூலமாகக்கெட்டதென்றும், இதுதான் ஸ்தூலமாக நல்லதென்றும் கிடையவே கிடையாது. "நாம் நம்புத்திக்கும், வீரியத்திற்கும் நம் நிலைமைக்கும், நமக்குள்ள துணைக்கருவி முதலிய உப பலன்களால், ஒவ்வொருவரும் தம்மால் இயன்றமட்டும் முயற்சி செய்து அபீஷ்ட பிராப்திஅடைய மார்க்கமுண்டு". இதுவே சிருஷ்டியின் உண்மையான தத்துவம். இதுவே விதி விளக்

கத்தின் கருத்து. இப்படிக்கல்லா விட்டால் துஷ்டன் யோகம் அனுபவிப்பதும், யோகிபிக்ஷாந்தேகி என்று வீதியில் திரிவதும், யோக்யன் அயோக்யனுவதும், அயோக்யன் யோக்யனுகத்திரிவதற்கும் ஏற்படாது. பட்ச பாத மில்லாத சாட்சாத் பரப் பிரம்மம், சிருஷ்டியின் ஆடல் டத்துவத்தின் மகிமையை இந்த நவக்கிரகங்களால் நாம் கண் டறிய வேண்டியதே ஒழிய வேறு மார்க்கம் கிடையாது. வேதாந்தம் பிரம்மத்தை அறிவதற்கு முயல்கிறது. சிருஷ்டி யின் அமைப்பை வானசாஸ்திரம் சொல்வதற்கு சக்தியற்ற தாக இருக்கிறது. வான சாஸ்திரத்தின் பெருமையையும், நம் மையும், நம்பூலோகத்தையும் இயக்கும் நவக்கிரகங்களின் செயல்களையும் பல இடங்களில் பல மானிடர்களாலும், அவர்களுக்கு நேரிடும் பலா பலன்களின் குறிப்பினுலும், அவர்கள் ஜனித்தகால நவக்கிரக கோடிக்கும் அதாவது ஜாதகத்திற்கும் நவக்கிரகங்கள் ஓயாத சரகதியினுல் வேறு வேறு நிலைமையினுல் அவைகள் மானிடருக்கு உண்டாக் கும் பலன்களையும் யூகித்து நவக்கிரக தத்துவம் அறிய மார்க்கமுண்டு.



# 3 - ஆம் அத்தியாயம்.

ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று
சூழினும் தான்முந் துறும். —திருக்குறள்.

இந்த நவக்கிரக தத்துவத்தை அறிவது முக்கியமான நாகரீக காலத்தின் கடமை. இவ்விஷயம் சாத்யமாவதற்குக் கிராம யூனியன்களிலும், முனிசிபாலடியிலும், முனிசீப் மணியம் ஆபீசுகளிலும், பட்டணம் அல்லது கிராமவாசிகள் யாவரும் இப்போது பிறப்பு இறப்பு குறித்துவைக்கிற போது, பிறந்த மணிநேரம் அல்லது இறந்தமணிநேரம் குறிக்கிறதில்லை. அதல்லாமலும், ஒவ்வொரு கிராமத்திலும் ஒரு சங்கம்ஏற்படுத்தி அங்கே அப்போதைக்கப்போது ஜனிக்கும் மானிடர்கள் தாய், தகப்பன், நிலைமை, தொழில், வியாதி, சாதி இப்படிப்பட்ட குறிப்புகளைத் தாக்கல்செய்து வைக்கவும் இம்மூலமாக 'ஜாதகம்' ஏற்படுத்தவும், அவர்களுக்கு உண்டாகும் ஆயுசுயோகம், அவயோகம், வியாதி ம்ருத்யுகாலம் இவைகளைக் கண்டறிய 'ஜாதக' நிபுணர் நேமித்து அதின் மூலமாக உண்டாகும் விலை மதிப்பில்லாத மானிடவாழ்க்கை 'குறிப்பை' ஏற்படுத்தி விட்டால், அக்குறிப்பினின்றும் அறியக்கூடிய சோதிஷ ரகசியம் இவ்வளவென்று அளவிடக்கூடாது. அதன்றியும், இச்சோதிடசாஸ்திரம் நாளுக்குநாள் மானிடருக்கு உபயோகப்படும்படியான நவக்கிரகதத்துவம் இவ்வளவென்று தெரிந்துக்கொள்ள ஓர் கருவியாகும். இப்படிக்கு நம் நாட்டு தனிஷ்டர்களுக்கு அபிப்பிராயம் உண்டாகுமாயினும் அல்லது கற்றறிந்த சிறுவர், சிறுமிகளுக்கு

உண்டானாலும், ஜோதிஷ சாஸ்திரத்தின் உண்மை உணர்ச்சியினால் மேன்மேலும் இவ்வகைச்சங்கம் ஆங்காங்கு தானே ஏற்பட்டுவிடும்.

இதுநிற்க, முன்இரண்டு அத்தியாயங்களில் சொல்லி வந்தபடி திதிவிஷயங்களை நன்கறிந்து நவக்கிரக செயலை ஒவ்வொருவரும் தங்களுடைய சரிவர குறிக்கப்பட்ட ஜாதகத்தை மூலதாரமாக வைத்து, தங்களுக்குப் பிறப்புடன் அமைந்துள்ள பலனுடன், இயற்கையாக நடந்துவரும் பலன்களை ஒத்திட்டுத் தங்கள் தங்கள் மனதைத் திருப்திசெய்து கொள்ளும்பட்சத்தில், திதிவிசேஷத்தை இன்னும் மேன்மேலும் கண்டறிய நம்நாட்டுக் கற்றோர்களும் ஏனையோரும் அதுவிஷயத்தில் ஊக்கமடைந்து ஒவ்வொருவரும் ஒவ்வொரு இடத்திலும், அனுபோகத்தைக் குறித்துவைத்து அதின் மூலமாக, நாளடைவில் நவக்கிரக ரகசியம் கண்டறியலாம் என்பதற்குச் சந்தேகமில்லை.

அவ்வளவு மேன்மையானதும், அதிக எளிதில் பலனைக் காட்டக்கூடியதுமான திதிவிசேஷத்தை இவ்வளவு என்று எடுத்துரைக்க என்றால் கூடவில்லை. ஆனால், அதின் மூலமாக இப்போது கண்டுபிடிக்கமுடியாத சில பலன்கள், அதிக கணக்கு யுத்தி இல்லாமலும், பிறந்த லக்னம், கிரகநிலை திதி நட்சத்திரம் இவைகளினாலேயே சில முக்கிய வாழ்நாள் பலன்கள் அதிக தெளிவாகவும் தீர்க்கமாகவும் ஏற்படும் அற்புதம், அதின் விஷயம் சற்றுக் கவனிப்பவர்களுக்குப் புலப்படும். இதல்லாமல் இதுவரையிலும் சோதிட சாஸ்திர சட்பாவவகையிலும், திசாபுக்திவகையிலும், காலசக்கிரவகையிலும், அஷ்டவர்க்க வகையிலும், ஆகிய இவை போன்ற இன்னும் சில அற்புதமான கணித வகையிலுங்

கூட சந்தேகத்தை உண்டாக்கும் நவக்கிரக பலாபலனுல் மானிடரடையும் சிலவாழ்நாள் பலன்கள் இத்திதிகளின் மூலியமாக வெளிப்படையாகின்றன. இதன்னியில் அப் போதைக்கப்போது வருஷம்மாறி வருஷம்நமக்கு நடக்கப் போகிற சிலபலன்களை இவைதான் என்றும், இவை ஊழின் பெருவலியுடைத்து என்றும், மாறுபடாவென்றும், நிச்சயிக்கக்கூடிய நிலைமையில் சோதிடரை நிறுத்தும் மார்க் கம் திதியைவிட வேறொன்றும் இருப்பதாகத் தெரியவில்லை. இதினுல் விவாகம், மிருத்தியு, கஷ்டநஷ்டம் இவையெல் லாம் நன்ருக யூகிக்கமுடியுமென்ருல், இதின் அற்புதம் இவ்வளவென்று சொல்லமுடியாது.

விதி என்பது ஒருவன் வாழ்க்கைக்கு மரத்தின் வேர் போன்றதுணை. எவ்வாறு ஒரு மரத்திற்கு வேர்மாற்றி வேறு மரமாக்க முடியாதோ அவ்வாறு ஒருவன் ஜனித்த மூலா தார நவக்கிரக சக்தியை மாற்றுவதரிது. அப்பேர்பட்ட நவக் கிரக சக்தி பிரசாதத்துடன் பிறந்த ஒருவன் தன் இயற் கையை மாற்றலரிது; திதி மூல்யமாகத் தெளிவாக ஏற்படும் பிரதி நவக்கிரக சக்தியை அறியாமல், நம்வாழ்நாள் சிறப் படைய நம்முடையகல்வித்திறம், செல்வத்துணை, சினேகிதர் உதவி,பந்துஉதவிஇவைகள் மூலமாக நாம் அப்போதைக்கப் போது நம் வாழ்நாள்களை மேன்மேலும் சிறந்ததாகச் செய்ய முயல்கின்ருேம்: ஆனுல் நமக்குஅமைந்துள்ள, நவக்கிரக பிர சாதசக்தியின்அளவு பலன் கைகூடுமேயொழிய அதிகவிபரீத பலன் கைகூடா. இது அனேகரின் நித்ய அனுபோகம் என் பதற்குச் சந்தேக மில்லை. பொருள் சம்பாதித்தால் நமக்கு எவ்வித சந்தோஷமும் உண்டாகிவிடும்என்று நம்பி அப்படி நவக்கிரக பிரசாதத்தால் பூரணமாயும் அபீஷ்டபூர்த்தி பொருளைத்தேடியும் அதில் குடும்பம், சினேகிதர், சர்க்கார்,

வியாபாரம், நீர், நிலம் இவைகள் மூலியமாகப் பொருள் இன்மைக்கு முந்திய கெட்ட பலனை விட பதின்மடங்கு கஷ்டம் வந்து சேர்ந்து சிலர் துக்கிக்கிறதும் உண்டு. இதுவே ஊழின் பெருவலி.

வான சாஸ்திரம் போதுமானவரையில் அநுபவத்தில் அறிந்த நம் முன்னோர்கள், பஞ்சாங்கம் மூலியமாக நம் எல்லோருக்கும் அனேக அற்புதமான விஷயங்களைத் திரட்டி உருட்டி (1)வாரம்(2) திதி(3)நட்சத்திரம்(4) யோகம் (5) கரணம் என்கிற இந்த ஐந்து விஷயங்களை விவரித்திருக் கின்றார்கள். அப்படியிருந்தும், இப்போது ஆங்கிலபாஷையில் தேர்ந்தவர்கள் சிலர் அவைகளைக் கண்டறிய சாவகாசமில்லாமலும் கவனியாமலும், பிறரைக் கவனிக்க வொட்டாமலும், காலம் செலுத்தி வருகின்றார்கள். ஆனால் அவர்களில், ராகுகாலம் குளிகைகாலம் இவைகளைமாத்திரம் சிற்சிலர் கவனிக்கின்றார்கள். ஆவனுடன் பஞ்சாங்கவிஷயத்தைக் கவனிக்காததின் காரணம் வானசாஸ்திர உண்மையை நம்வாழ்நாள்களுக்கு உபயோகிக்க அறியாமையே. இந்துக்கள் ஒவ்வொருவரும் பஞ்சாங்க விஷயத்தை அறிந்து அதை தினப்படி உபயோகிப்பதே நமக்கு ஓர் சிறப்பு. (1) வாரங்களில் முதலாவது திங்கள், புதன் வெள்ளி இவைகள் சகல சுபங்களுக்கும் அனுகூலமானவை. செவ்வாய், வியாழம், சனி, ஞாயிறு இவை அவ்வளவு சிரேஷ்டமாகத் தினசரி அனுஷ்டானத்திற்கு எடுக்கவில்லை. ஆனால் பிராரத்துவ பலன் போல், செவ்வாயினும் ஞாயிறிலும் வியாழனிலும் விவாகம் முதலிய சுபங்கள் நடந்தேறுவதினால் மேல் சொல்லிய சுபவாரங்களின் மகிமை குறைவதில்லை (2) இரண்டாவதான திதி, சூரியன் சந்திரன் இவைகள் ஒன்றுக்கொன்று இருக்கப்பட்ட நிலையினால் பூமிக்கு ஏற்படும் ஒருவித சுபாவ

நிலையைக் குறிப்பது. திதியினால் சூரியனும் சந்திரனும் இருவரும்சேர்ந்து தங்கள்சரகதியினால் பூமியை இயக்கி மற்றபசப்த கிரகங்களின் சக்தியைஆக்கிரணம் செய்து மானிடர்களுக்குப் பல பல வேளைகளிலும், பல பல இடங்களிலும் அவர் அவர் பிராரத்துவம் போலவும்,ஜெனனகால நவக்கிரகப் பிரசாத ஈடு போலவும் இயக்கி மணமகனைப் பிணமகனுக்கலும், மணமகளை மணம் சூட்டுமுன் பிணமகளாக்கலும், இதுபோன்ற அனேக பலனை யுண்டுபண்ணுகின்றனர். கிரகணகாலத்தில் மானிடருக்கு ஒருவியப்பையும், பயங்கரத்தையும் எங்கும் பரவச் செய்து தங்கள் சக்தியை அப்போதைக்கப்போது காண்பித்து வருகின்றனர். (3) மூன்றாவது - நட்சத்திரம் சந்திரனுடைய நித்ய சரகதி நிலையைக் காட்டுகின்றது. மற்றய கிரகங்களைவிட பூமிக்கு அதிக சமீபத்தில் சஞ்சரிப்பதினால், சந்திரன் தினபலனை மானிடர் யூகிப்பதற்கு உதவியாயிருக்கின்றான்.(4)நான்காவது-யோகம்இதுவும்நட்சத்திரத்தைப்போல் 27-வகையுள்ளதானாலும், நட்சத்திரத்தைப் போல் நாழிகை ஆதியந்தம் எடுத்து ஜெனனகால சேஷம் கணக்கிட்டு, அந்த நாழிகையை வருஷமாகவும், விநாடியை மாதமாகவும் வைத்துக் கவனித்தால் ஒவ்வொருவருடைய "யோகம்" மாறுவதுபோல் இப்பூவுலகில் தங்கள் தங்கள் அனுபவ யோகம் எப்படி மாறி வருகின்றது என்பது ஏற்படும். நட்சத்திரத்தைக் கொண்டு திசை கணக்கிடுகின்றோம். ஆனால் யோகம் ஸ்தூலமாக வாழ்நாள் யோகக் கூறுபாட்டை, ஜெனன சேஷ வருஷம் மாதம் வரையில் ஒவ்வொருவர் ஆயுள்காலத்தில், தெரிவிப்பதாகத் தற்கால ஆராய்ச்சியில் ஏற்பட்டிருக்கின்றது. (5) கரணமோ வென்றால் தீர்க்கமாக ஆயுள்பரியந்தம் நடக்கும ஆன்ம சுபாவத்தைத் தெரிவிக்கிறது; இது யோகத்தைப்போல் மாறி வருகிறதில்லை.

---

## 4-ஆம் அத்தியாயம்.

### பஞ்சாங்கம்

மூன்றாவது அத்தியாயத்தில் பஞ்சாங்கத்திலுள்ள பஞ்ச அம்சங்களைப்பற்றிக் குறிப்பாகச் சில விஷயம் காட்டியிருந்தோம். அவ்விஷயமாக இன்னும் "வாரம்" "திதி" முதலியவற்றை அனுசரித்துக் கீழ்வருமாறு தற்கால ஆராய்ச்சியில் ஏற்பட்டவரைக்கும் விளக்குகின்றோம்.

வாரங்களில் எல்லாவித சுபங்களுக்கும் சுப முகூர்த்தத்திற்கும் திங்கள், புதன், வெள்ளி முக்கியமானவை என்று சொல்லியிருந்தோம். ஆனால் சிருஷ்டியின் அமைப்பில் பூலோகத்தில் யாதொன்றும் ஸ்தூலமாகக் கெட்டதென்றும், நல்லதென்றும் எப்படி கிடையாதோ, அவ்விதமாகவே இவ்வாரங்களிலும் தீர்க்கமாக நல்லதென்றும் கெட்டதென்றும் கிடையாது. சில திதிகளில் சந்திரன் லக்னத்தில் அமைந்து அல்லது லக்னத்தையாவது பார்த்தால், அன்றைய வாரம் திங்களாகில், சுபமுகூர்த்தத்திற்கு ஆகா. சுப முகூர்த்தமும் நடவா. இதுபோல, சில திதிகளில் புத உதயமும், சுக்கிர உதயமும் குரு உதயமும் ஆகா. ஆகாதெனில், சுபமுகூர்த்தமும் தவறிவிடுவதன்றி, வேறு

கெட்ட பலன்களும் நடக்கலாம். ஆனால் இவ்வாறு அமைந்த போது சில கிரகநிலைகளில் சந்திர, புத, சுக்கிர உதயம் இவை மாத்திரம் நன்மைதரும்; சுப முகூர்த்தங்களுக்கும் ஆகும். இவை திதி அதிகாரத்தில் விசிதமாகத் தெரிந்துக் கொள்ளலாம்.

ஆனால், இம்மாதிரியான பலன் யோகங்களுக்கும், கரணங்களுக்கும் கிடையாது. ஏனெனில், யோகம் கரணம் இவைகள் திதியின் நிலைமையில் ஏற்படுவன. திதியின் பலாபலன் அன்றைய யோகத்திற்கும் கரணத்திற்கும் உண்டு. கரணம் என்பது திதியின் பாதி நாழிகை வரையில் வியாபிக்கும் கால அளவு. நட்சத்திரம், யோகம் இவை 27-ம், மாதம் 27-ம் சில்லரை நாளை, ஒவ்வொன்றும் தனித்தனி பங்கிட்டுக் கொள்வதுபோல், கரணத்தித்கு அவ்வளவு வியாபகம் கிடையாது. எப்போதும் எவ்விடத்தும் திதியின் பாதி நாழிகை கரணத்தின் காலம். ஆனால் திதியும் நட்சத்திரமும் அவை செல்லும் காலப் பிரமாணம் இடத்திற்குஇடம் பேதமாகும்.அதாவது, சென்னையில் ஒருதிதி59-நாழிகை வியாபகமானல், அதே திதி பொம்பாயில் சற்றேறக்குறைய 50 நாழிகையிலே முடிந்துவிடலாம். இப்படிவியாபிக்கும்.திதியின்நிலைமையில் யோகமும், கரணமும் சம்பந்தப்பட்டிருக்கின்றன. ஆகையால் திதி யோகம் கரணங்கள் ஒன்றாய் அமையும்.முன் சொல்லியபடி திதியினல் கிரகநீது, ராசிநீது, பாவநீது, கிரகபார்வை நீது ஏற்பட்டு விடுகின்றன. இதற்கும் லக்னத்தினல் அமையும் சுபகிரகம், பாபகிரகம் என்னப்பட்டவைகளுக்கும் சம்பந்தம் உண்டாகி ஜெனனகால "யோகம்" அமைகின்றது. இங்கே யோகம் என்றால் 'பிறவிநிலை', அதாவது பிறந்தகால பிராரத்வ அதிர்ஷ்ட துர்அதிர்ஷ்ட நிலைமை. ஆனால் திதியினல் ஏற்படும் கிரக நீது, பாவநீது,

பார்வை தீது இவை மேம்படுகின்றன. இதைப்பற்றி அனேக சந்தேகங்கள் ஜாதகத்தில் பலபாவத்தில் உண்டாவதைத் தீர்த்துக் கொள்ளலாம்.

அமாவாசை, பௌர்ணமி திதிகள் தவிர, மற்ற திதிகளால் ராசிதீது, ராசி அதிபதிதீது, பாவதீது, பார்வைதீது இவைகள் உண்டாகின்றன. இவைகளைப்பற்றி திதி அதிகாரத்தில் விசிதமாகச் சொல்லப்படும்.

## (1) வாரம்

(1) வார சூன்யம்—வாரமும் நட்சத்திரமும் கூடிய தினத்தன்று நன்மை உண்டாகாதவாரம். அப்படிப்பட்ட நாள்களும் சுபத்திற்குஆகா. எவ்வித காரியமும் அன்று ஆரம்பம்செய்யக் கூடாது.

| | |
|---|---|
| ஞாயிறு— | அனுஷம், கேட்டை, மகம், பூரட்டாதி, கார்த்திகை, விசாகம். |
| திங்கள்— | பூராடம், அனுஷம், மகம், பூரட்டாதி, கார்த்திகை, விசாகம். |
| செவ்வாய்— | அவிட்டம், திருவோணம், சதயம், கேட்டை, திருவாதிரை. |
| புதன்— | மூலம், திருவோணம், கார்த்திகை, அவிட்டம், அசுவனி, பரணி. |
| வியாழம்— | மிருகசிரம், பூராடம், ரேவதி, புனர்பூசம். |
| வெள்ளி— | பூசம், விசாகம், ரோகிணி, அவிட்டம், மிருகசிரம், அஸ்தம், அனுஷம். |
| சனிக்கிழமை— | அஸ்தம், பூசம், புனர்பூசம், உத்திரம், ரேவதி. |

இவை பொதுவிதி. திதி யோகம் இவைகளினால் மேற்காட்டிய வாரசூன்யம் நன்மையாக முடியும். தெய்வ அனுகூலத்தில் மனுஷ்ய எத்தன மின்றி விசேஷ காரியங்களும், சுபங்களும், இஷ்டப்பிராப்தியும் உண்டாகலாம்.

(2) கிழமை பிறந்த (நாள் என்கிற) நட்சத்திரம் கூடிய வாரங்களில் செய்கருமம் எல்லாம் தீமையாய் விளையும். இவை நித்ய அனுஷ்டானத்திற்கு ஏற்பட்டவை. அவை வருமாறு.

| | |
|---|---|
| ஞாயிறு | பரணி |
| திங்கள் | சித்திரை |
| செவ்வாய் | உத்திராடம் |
| புதன் | அவிட்டம் |
| வியாழம் | கேட்டை |
| வெள்ளி | பூராடம் |
| சனிக்கிழமை | ரேவதி |

இது சிறப்புவிதி இதை அனுஷ்டிக்கவேண்டியது அவஸ்யம்.

## (2) நட்சத்திரம்

நம் கண்களுக்குப் புலப்படும்வரை திருஷ்டியால் நோக்க ஏற்படும் வான அற்புதம் ஈடில்லாத வியப்பைத் தருவதன்றி வாழ்நாள் முழுதும் கவரத்தகும் மன எழுச்சியை உண்டாக்கி நாளொரு வண்ணம் மேன்மேலும் வியப்பையும் ஆச்சரியத்தையும் உண்டாக்கும். இதன் ஆராய்ச்சியிலும், விசாரணையிலும் வாழ்நாள் கழிக்க முயல்கிறவர்கள் மிகச் சிலர்: தூரதிருஷ்டிக் கண்ணாடி (TelesCope) மூலமாகநோக்குபவர்களுக்கு அதில் உண்டாகும் உற்சாகமும், ஏற்படும் தெய்வகற்பனையும் மனதுக்கெட்டாத அற்புதமும் நாளுக்கு நாள் மேம்படுமே தவிர முடிவு பெறாது. இதுவிஷயமாகக் காலங்கழித்தவர்கள் நம் இந்துக்களில் வெகு சிலர்.

தற்காலத்திய ஆங்கிலநூல்களில் இவைகளைப்பற்றித் தனித்தனி ஒவ்வொரு நட்சத்திரமும் ஒவ்வொரு சூரியனுகை

இருக்கவேண்டும் என்றும், அவைகள் தங்கள் பிரகாசத்தி ஞலேயே ஜொலிக்கின்றன வென்றும், சொல்லப்படுகின் றன. இதன்றி அவைகள் ஒன்றுக்கொன்று, சுபாவ அமைப் புள்ள பொருள்களின் வித்தியாசங்கள்போல், உஷ்ணத்தி லும், பிரகாசத்திலும், பருமனிலும், வித்தியாசப்படுகின் றன வென்றும், இரண்டு நட்சத்திரங்கள் சரிவர ஒன்றுக் கொன்று எல்லாவிதத்திலும் சமஞக இல்லை என்றும் சொல்லுகிருர்கள். மேலும் அவைகளில் சில சூரியனைவிடப் பதின் மடங்கு உஷ்ணம்பொருந்தியவை என்றும் தற் கால வானசாஸ்திரத்தலைவர்களின் அபிப்பிராயம். இன்னும் ஒரு விசேஷம் நட்சத்திரங்களுக்கு உண்டு. அதாவது அவை ஆகாயத்தில் பதிந்த நிலையில் நிற்கின்றவே யொழிய அவைகள் கிரகங்களைப்போல் ராசிகளில் சஞ் சரிப்பதில்லை. இதுஒரு முக்கியமான வானசாஸ்திரஉண்மை. இதை நன்ருய் மனதில் பதித்துக்கொள்ள வேண்டும். இவைகள் ராசிகளில் பதிந்திருப்பதிஞல் நம்முன்ஞேர்கள் இன்னராசியில் இன்ன நட்சத்திரம் காணப்படுமென்றும் யூகித்து அதின் வியாபகமும் ஏற்படுத்தி இருக்கிருர்கள். ஆஞல், சுபாவ அமைப்பில் வான ஜோதிப் பொருள் களாகிய சூரியன் சந்திரன் கிரகங்கள் இவைற்றைப் போல் எல்லா நட்சத்திரங்களுக்கும் ஓயாத சரகதியுண்டு; அப்படியிருந்தும் அவைகளுக்கும் நம்பூமிக்கும் இருக்கப் பட்ட கணக்கிடகூடாததாய் மனதிஞல்கூட இவ்வள வென்று யூகிக்கமுடியாத தூரத்தில் அவைகள் அமைந் திருப்பதிஞல், அந்த நட்சத்திரங்கள் ஒரே இடத்தில் ஸ்திரமாக அமைந்திருப்பதுபோல் நமக்கு தோன்று கின்றன. இது கண்காட்சியேயொழிய அவைகளுக்கு உண் மையில் அமைந்திருக்கும் கதிஅல்ல. இதன் உண்மையைத்

தீர்க்கமாய் மனதில் உறுதியாய்க்கொள்ள வேண்டும். ஏனெனில் அகண்ட ஆகாசப் பிரபஞ்சத்தில் சரகதியன்றி எவ்விதமான பொருள்களும் கிடையா. ஸ்திரமாகத் தோற்றுவது ஒரு காட்சி; அதின் உண்மைத்தத்வம் சரகதியே என்று அனுபவத்தில் ஒவ்வொருவருக்கும் உண்டாக வேண்டியது. ஜகத்சிருஷ்டி உண்மை இதுவே.

## (3) யோகம்

நம்விதிவிளக்கத்திற்கு வேண்டிய நட்சத்திர விஷயங்களைப்பற்றிக் குறிப்பாகவும் அதிக விசிதமாகவும் கூடிய வரையில் உதாரணத்துடன், நட்சத்திர அதிகாரத்தில் சொல்லப்படும். ஆகையால் 'யோகம்' என்னவென்றும், அது எவ்வாறு விதிவிளக்கத்தில் பயன்படுகின்றது என்றும் கவனிப்போம்.

சூரியன் ஒரு வருஷத்தில் ராசிகள் பன்னிரண்டிலும் பிரவேசித்துவருவது ஒரு கதி; அப்படிச் சஞ்சரிக்கும் காலத்தில் உண்டாகும் காலவெப்ப வித்தியாசத்தினால், ஒரு வருஷத்தை இரண்டுபாகமாக ஆக்கியிருக்கிறார்கள். அதாவது தைமீ முதல் ஆனிமீ வரையில் உத்தராயணம் என்றும், ஆடிமீ முதல் மார்கழி முடிவுவரையில் தக்ஷிணாயனம் என்றும், அவ்வாறு சூரியன் தைமீ மகரராசிப் பிரவேசத்தில் சங்கராந்தி கொண்டாடுவது எல்லோருக்கும் தெரிந்த விஷயம். அதல்

லாமல் தைமீ உஷ்ணகாலமாரம்பித்து ஆனிமீ முடி வில் மழைகாலம் ஆரம்பிக்கிறது. ஆகையால் சூரிய சம கதியினால் ராசிகளில் பன்னிரண்டு மாதங்கள் சஞ்சரிக் கும்போது உண்டாகும் வித்தியாசத்தை யாவரும் எளி தில் தெரிந்துக்கொள்ளலாம். இக்காலங்களை நன்றாக வரையிட்டுச் சோதிட உண்மையை அறியவேண்டி, நம் முன்னோர்கள் உத்திராயணம் திருவோணநட்சத்திரத்தில் ஆரம்பிக்கிறதென்றும், தக்ஷணாயனம் புஷ்யம் அல்லது பூச நட்சத்திரத்தில் ஆரம்பிக்கின்ற தென்றும், ஒரு சங்கியை ஏற்படுத்தி இருக்கிறார்கள். இவைநிற்க, இந்த இரண்டு நட் சத்திரங்களினின்றும் சூரியன் சந்திரன் இரண்டும் தனித் தனி அல்லது சேர்ந்துநிற்கும் யாதேனும் ஒருபொழுதின் நிலையைக் கணக்கிட்டு அதை "யோகம்" என்று பெயரிட் டிருக்கிறார்கள். வானசாஸ்திர நிபுணராகிய எல். டி. ஸ்வாமி கண்ணுப்பிள்ளை அவர்கள், யோகம் கணக்கிடுவதற்காக, சூரிய சந்திரர்கள் பன்னிரண்டு ராசிகளின் வியாபகமாகிய 360-பாகையைச் சந்திரகதியினின்றும், சந்திரன் தாராகணத் தின் பிரவேசத்தினால் நட்சத்திரமாதம் வியாபகம் சுமார் ($27\frac{1}{3}$) இருபத்தேழு நாலுமா நாள்கள் என்றும், யோக மாதம் வியாபகம் சுமார் ($25\frac{1}{2}$) இருபத்தைந்தரை நாள்கள் என்றும் கொடுத்திருக்கிறார். நம்முன்னோர்கள் பன்னிரண்டு ராசிகளுக்குள் இருக்கப்பட்ட சகலவித நட்சத்திரகணங்களை 27-பாகமாக்கி அவைகளைத் தனித்தனி பெயரிட்டு இருக் கிறார்கள். அதுபோலவே, யோகம் வியாபிக்கும் காலத்தை யும் 27-ஆகப் பிரித்து தனித்தனி பெயரிட்டிருக்கிறார்கள்.

யோகங்களின் பெயர்களாவன:—

| | | |
|---|---|---|
| விஷ்கம்பம் | கண்டம் | பரீகம் |
| பிரீதி | விருத்தி | சிவம் |
| ஆயுஷ்மான் | துருவம் | சித்தம் |
| சௌபாக்கியம் | வியாகாதம் | சாத்தியம் |
| சோபனம் | அரிஷணம் | சுபம் |
| அதிகண்டம் | வச்சிரம் | சுப்பிரமம் |
| சுகர்மம் | சித்தி | பிரஹ்மம் |
| திருதி | விதீபாதம் | அயிந்திரம் |
| சூலம் | வரீயான் | வைதிருதி |

தற்காலத்தில் பஞ்சாங்கத்தில் காட்டியிருக்கும் யோகங்களாவன (அ) அமிர்தயோகம், (சி) சித்தயோகம், (ம) மரணயோகம், (பிர) பிரபலாஅனிஷ்டயோகம். இந்த யோகம் சகலருக்கும் தெரிந்தவை. சகல முகூர்த்தங்களுக்கும் அனுசரிக்கப்பட்டு வருகின்றன. மேற் சொல்லிய 27-யோகங்களுக்கும் இவைகளுக்கும் விதி விளக்கத்திற்கும் சம்பந்தமே கிடையாது. அமிர்தாதி யோகங்கள் வாரத்தையும் அவ்வாரத்திய நட்சத்திரத்தையும் அனுசரித்த யோகங்கள்; இவை சுப காரியங்களுக்கும் சுப முகூர்த்தங்களுக்கும் வேண்டியவை யாகையால் கிரகஸ்தர்களுக்கு எளிதில் காணும் பொருட்டுப் பஞ்சாங்க கணிதர்கள் கொடுத்திருக்கிறார்கள். ஆனால், நாம் முக்கியமாக நம் விதி விளக்கத்திற்கு ஒவ்வொருவரும் கவனிக்க வேண்டியது மேற்காட்டிய 27-யோகங்களே; இவைகளுடைய தனித்தனி பலன்களை கீழ்வருமாறு சில நூல்களில் கொடுக்கப்பட்டுள்ளன.

(1) விஷ்கம்பம்— பிறரை ஜெயிப்பவன், தனவந்தன், கன்றுகாலி உடையவன்.

(2) பிரீதி— மற்றஸ்திரீகள் வசப்பட்டவன்.

(3) ஆயுஷ்மான்— அனேகநாள் ஜீவிப்பவன், வியாதி இல்லாதவன்.

(4) சௌபாக்கியம்-சந்தோஷமுடையவன்.

(5) சோபனம்— காமாதுரன்.

(6) அதிகண்டம்—கொலைசெய்பவன், அந்தச் சுபாவ முள்ளவன்.

(7) சுக்ரமம்— தனவந்தன், சன்மார்க்கன்.

(8) த்ருதி— மற்றவர் தனத்தையும் பெண்களையும் அபகரிப்பவன்.

(9) சூலம்— கோபி, சண்டைக்குமுன் நிற்பவன்.

(10) கண்டம்— துன்மார்க்க நடைப்பிரியன்.

(11) விருத்தி— புத்திசாலித்தனமாகப் பிரசங்கிப்பவன்.

(12) துருவம்— குபேரன், அதிகதனவந்தன்.

(13) வியாகாதம்— கொடூரன்.

(14) ஹர்ஷணம்— புத்திசாலி, அதிகப்பேர்பெற்றவன்.

(15) வஜ்ரம்— தனவந்தன், காமி.

(16) சித்தி— அனேகருக்கு அபயம் கொடுப்பவன், பிரபு போல் பவன்.

(17) வியதீபாதம்— மோசக்காரன்.

(18) வரியான்— துன்மார்க்கத்தனமான காமி.

(19) பரீகம்— சண்டையிடுபவன், ஆனால் தனவந்தன்.

(20) சிவம்— சாஸ்திரம் அறிந்தவன், தனவந்தன், சாந்த முடையவன், அரசர்களால் பூஜிக்கப்பட்டவன்.

(21) சித்தம்— சன்மார்க்கன், யாகம் செய்பவன்.

(22) சாத்யம்— சன்மார்க்கன்.

(23) சுபம்— அழகுள்ளவன், தனவந்தன், கபத்தால் பாதிக்கப்பட்டவன், எப்போதும் காம நோய் உடையவன்.

(24) சுப்ரமம்— சன்மார்க்கன், வாய்ச்சாலன், கோபி, மனோதிடமில்லாதவன்.

(25) பிரம்ஹம்— ரகசியச் செல்வம், அதிகமேம்பாடான பதவியில் கமனம், கர்ணன், சரியான தீர்ப்பு சொல்வதில் சமர்த்தன்.

(26) மஹேந்திரம்—எல்லாருக்கும் நன்மைசெய்பவன், சகலத்தையும் அறியும் ஞானி, தனவந்தன்.

(27) வைத்ருதி— தந்திரி, பிறரைத் தூஷிப்பவன், பலசாலி, தனவந்தன்.

இதனால் பலன்யூகிப்பது எப்படியெனில் ஜெனன காலத்தன்று, ஜெனன மணிநேரத்திற்கு எந்த யோகம் வியாபகமாகின்றதோ அந்தக் குணகுணங்கள் ஜாதகருக்கு அமையும். ஜெனனமணி நேரத்திற்கு ஒரு யோகம் சில நாழிகை வியாபகமாகிப் பிறகு வேறு யோகமாறினால், ஜாதகருக்கும் அப்படியே வயது நடுவில் குணகுணங்கள் மாறிவிடும். ஒரு யோகம் சுமார் அறுபதுநாழிகை வியாபகமாகையால், ஒருமனிதருக்கு அல்லது ஸ்திரீக்காவது இரண்டு யோகத்திற்குமேல் ஆயுள்காலத்திற்குள் மாறிவர மாட்டா. ஏனெனில் இரண்டு யோக வியாபகமாகிற காலம் சுமார் 120 - நாழிகையாகும்: ஒரு நாழிகைக்கு ஒரு வருஷமாக கணக்கிட்டால் 120 - வருஷம் எந்த மானிடரும்

இருப்பதரிது. ஆகையால், ஒருயோகம் அல்லது இரண்டு யோகம் ஒருவருக்கு நடக்கலாமே தவிர இரண்டுக்குமேல் நடவா.

உதாரணம்: ஒருவர் சூரிய உதயாதி 53-30 நாழிக்கு ஜெனனம்: அன்று விருத்தி: 37-47-க்கு மேல் துருவம். அவர் பிறந்தகாலத்தில் துருவயோகத்தில் பாக்கி செல்ல வேண்டிய 45-15 ஆகில், அந்த ஜாதகருக்கு 45-வது வயது வரையில் துருவயோகப் பலனும், அதற்குப் பிறகு ஜீவ்ய காலம்வரைக்கும் வியாகாதயோகப் பலனும் நடக்கும்; இது புருஷ ஸ்திரீகளுக்கு நாம்பிறந்த வருஷ பஞ்சாங்கத்தினின்றும் கண்டறியலாம்: இந்தப் பலன் ஜாதகத்தில் கிரகங்கள் கொடுத்த பிராரர்த்வபலன்போல் மேம்பட்டும் குறைந்தும் இருக்கும். இது ஆராய்ச்சியில் ஏற்பட்ட தத்வம்.

ஜாதக நிபுணர்கள் ஜோதிஷ விஷயமாக பலாபலன் அறிந்து கீழ்கண்ட யோகத்தில் பிறந்தவர்களுக்கு நல்ல பலன் கிடையாதென்று எழுதியிருக்கிறார்கள்.

(1) விஷ்கம்பம். (2) அதிகண்டம். (3) சூலம். (4) கண்டம். (5) வியகாதம். (6) வஜ்ரம். (7) வியதீபாதம். (8) பரீகம். (9) வைதிருதி.

## (4) கரணம்.

கரணம் என்னும் சமஸ்கிருதவார்த்தைக்கு ஓர் தினத்தின் ஒருபாகம் என்று பெயர். வானசாஸ்திரம் கிரகஸ்தர்களுக்கு உபயோகமாகும்பொருட்டு, பலாபலன் பலவிதமாகக் கிரகசஞ்சாரத்தில் உண்டாக்கும் வேறுபாட்டினைக் குறிக்கும் இது ஒருவிதம். அதாவது பூமியின் மத்யஸ்

தானத்தை (அதாவது மேஷராசியை) முதன்மையாகவைத்துக்கொண்டு, அதிலிருந்து யாதாமொருநாளிலாவது, ஒரு பொழுதிலாவது சூரியனுக்கு இருக்கப்பட்ட தூரத்தையும், சந்திரனுக்கு இருக்கப்பட்ட தூரத்தையும், கணக்கிட அதின் வித்யாசத்தைக் காட்டும் ஒரு வானசாஸ்திரப்பகுதி. இப்படி கணக்கிட்டுக் 'கரணம்' என்பதை திதியில் பாதி நாழி வியாபககாலம் என்றும் சொல்வதுண்டு: சந்திரனுக்கும் சூரியனுக்கும் நித்யகதியினால் உண்டாகும் தூரத்தைக் காட்டுவது திதியாகும். ஆகையால் அப்படி ஏற்படும் திதியின் வியாபககாலம் அரைப்பகுதி கரணமாகும்: ஆகவே ஒருதிதியின் இரண்டாவது கரணமுடிவுகாலமே மறுதிதியின் ஆரம்பகாலமாகும்: ஆனால் பஞ்சாங்கத்தில் ஒரு தினத்தில் காட்டியிருப்பது ஒரு திதியின் வியாபகமாக இருந்தபோதிலும் வழக்கத்தில் அன்றைய திதிமுடிவில் வியாபகமாகும் கரணத்தைமாத்திரங் காட்டியிருக்கிறது. எந்தக் கரணம் சூரிய உதயத்திலிருந்து முப்பதுநாழிகை அல்லது அதற்குக் குறைவான நாழிகை வியாபகமாகிறதோ அதை அன்றைய கரணமாகப் பாவிக்க வேண்டும். இவ்வித கரணத்தை நம்முன்னோர்கள் ஜோதிட சாஸ்திரத்திற்குப் பலனை யூகிக்க உபயோகமாகும்பொருட்டுப் பதினொருவிதமாக எடுத்திருக்கிறார்கள்; அவை கீழே வருமாறு.

| | |
|---|---|
| பவம் | பத்திரை |
| பாலவம் | சகுனி |
| கௌலவம் | சதுஷ்பாதம் |
| தைதுலை | நாகவம் |
| கரசை | கிமிஸ்துக்கினம் |
| வனசை | ——— |

இவைகளில் ஜெனனகாலத்தில் மானிடருக்கு உண்டாகும் ஸ்தூல பலன்களாவன:—

(1) பவம்— தைரியசாலி, சந்தோஷகரமான சுபாவம், அரசர்களால் திரவியம் சம்பாதிப்பவன், ஜோதிடன், புத்திசாலி, அழகன், மிருதுவான தலைமயிர் உடையவன்.

(2) பாலவம்— இந்திரனைப்போல் சௌக்கியம் அனுபவிப்பவன், அதிக தனவந்தன், அழகன், அதிக கடமையில்லாதவன், சன்மானம் கொடுப்பதில் பிரபு, காமதுரகன், இறுமாப்புடையவன், பந்துக்கள் நேசி.

(3) கௌலவம்—அரசரால் இச்சிக்கப்பட்டவன், சுசிகரன், தாய்தகப்பனை நேசிக்கிறவன், நிலபலம் உள்ளவன், உதாரகுணன், குதிரையும் யானையும் உடையவன்.

(4) தைதுலை— மந்திரி, தனவந்தன், ஸ்திரீநேசன், தர்மிஷ்டனல்லாதவன், தன்சௌக்கியத்தைக் கருதுகிறவன், சுயகாரியப் பிரியன்.

(5) கரசை— கெட்டஸ்திரீகள் நேசன், அரசர் வேலைக்காரன், விரோதிகளை ஜெயிப்பவன், உதாரகுணன்.

(6) வணசை— குரூரன், லோபி, படபடப்பாய் பேசுகிறவன், ஸ்திரீலோலன், கண்டிப்பாய்ப் பேசுகிறவன், திடசித்தம் இல்லாதவன், குறைவுள்ளவன்.

(7) பத்திரை— கெட்ட அவலக்ஷணமானவன், துன்மார்க்கத்தனமானவன், இழிவானவன், திருப்தியில்லாதவன், சாமர்த்திய மற்றவன்.

(8) சகுனி— அகங்காரன், அழகன், தனவந்தன், நிலபலமுள்ளவன், புத்திசாலி, கற்றவன், பந்துக்கள் உடையவன்.

(9) சதுஷ்பாதம்--வாக்குத்தத்தம் காப்பாற்றுதவன், ஏழை, வேசைப்பிரியன், அயோக்யன், கோபி, கலகப்பிரியன், தத்வம்பேசுகிறவன்.

(10) நாகவம்— குறையுள்ள அங்கமுடையவன், கோழைத்தனமானவன், தைரியமில்லாதவன், கோபி, அனேக நிலமுடையவன், ஸ்திரீபிரியன், மன உறுதி யில்லாதவன், நேர்த்தியான உணவுப்பிரியன்.

(11) கிமஸ்துக்னம்-சச்சரவு உண்டாக்குகிறவன், ஸ்திரீலோலன், மாதாபிதாபிரியன், மூத்தோர்பிரியன், வேசிப்பிரியன், லௌகிகத்திற்குத் தகுந்த புத்திசாலி, யோகி, பிறரால் மதிக்கப்பட்டவன்.

விதிவிளக்கத்திற்காக நாம் கவனிக்க வேண்டிய கரணங்களாவன.

(1) பவம்: (2) கரசை: (3) வனசை: (4) விஷ்டி: (5) சகுனி: (6) சதுஷ்பாதம்: (7) கிமஸ்துக்னம்.

இந்தக் கரணங்களில் ஜெனித்தவர்கள் அதிஷ்டஈனர்களாயும், கெட்டவர்களாயும் இருப்பார்கள் என்று சில சாஸ்திரங்கள் குறிப்பிடுகின்றன.

## கரணம் முடிவு.

வராஹ மிஹிரர் எழுதிய பிருகத் ஜாதகத்தில் யோகத்தினுல் ரோக நிவாரணம் என்றுசொல்லி யிருக்கிறது. ஆனால் எந்தயோகத்தில் பிறந்தவனுக்கு எந்த்யோக அனுஷ்டானத்தினுல் இவ்வித பலன் கிடைக்குமென்று விவரமாகச் சொல்லவில்லை. ஜாதகன் பிறந்தகால லக்னம், கிரகநிலை இவைகளினுல் ஒருவன் ரோகியாகப் பிறப்பது எல்லோருக்கும் தெரிந்த விஷயம்: ஆனுல் எவ்விதத்தினுல் ரோக நிவாரணம் உண்டாகுமென்று சொல்லுகிற காவியங்களும் கிடையா. மேற்சொல்லியபடி யோகமானது பூமியினின்றும் சூரிய சந்திரர் நிலையைக் கண்டறிந்து நிர்ணயிக்கப் பட்ட ஒரு நிலையானதினுல், அவ்வாறே ரோக நிவாரணத் திற்கும் ஓர் மார்க்கம் உண்டென்று ஏற்படுகிறது. அதுவிஷய மாக என் ஆராய்ச்சியில் ஏற்படுவனவற்றை வேறு பதிப்பு களில் வெளியிடுகின்றேன்.

இவ்விதமாகவே, கரணத்தினுல் காரிய சித்தி உண்டாகு மென்றும் சொல்லியிருக்கிறது. ஆனுல் பொதுவாகச் சொல் லப்பட்டிருக்கிறதே யொழிய, விவரமாக இந்த ஜாதகன் இவ்வித கரணத்தில் இன்னவிதமான அனுஷ்டானம் செய்ய வேண்டியதென்றும் அவ்வனுஷ்டானத்தினுல் அவனுக்கு எவ்வித காரியசித்தி உண்டாகுமென்றும் தெளிவாகச் சொல் லப்படவில்லை. இவைகளைப்பற்றி மறு பதிப்பில் விசிதமாக ஆராய்ச்சியில் ஏற்பட்டதை வெளியிடுகின்றோம்.



# 5 - ம் அத்தியாயம்.

## நட்சத்திரம்.

அதிகப்பிரகாசம் பொருந்திய சூரியபகவான் பன்னிரண்டு ராசிகளிலும் சஞ்சரிப்பதினால் பன்னிரண்டுமாதங்களாகின்றன; இப்படி, சித்திரைமுதல் பங்குனிமாதம்வரையில் சஞ்சரித்து, உத்தராயணம் தக்ஷிணாயனம், ருதுக்கள், கோடைகாலம் மழைகாலம், இவைகளை உண்டாக்கி வருகிறார். ஆனால், சந்திரன் சுமார் ஒருமாதத்திற்குள் பன்னிரண்டு ராசிகளையும் சுற்றிவருகிறார்; இப்பன்னிரண்டு ராசிகளிலும் 27-நட்சத்திரங்கள் வியாபித்திருக்கின்றன: ஆகையால், ஒருராசியில் இரண்டேகால் நாள் சஞ்சரிக்கிறார் என்பதாயிற்று. இப்படி $2\frac{1}{4}$-நாள்களுக்கு ஒருமுறை இடம்மாறுவதினால், பஞ்சாங்கத்தில்காணும் இராசிச்சக்கிரத்தில் ஒவ்வொருகிரகத்தின் பெயரும், ஒவ்வொருமாதமும் அது அது நிற்கும் வீட்டில் குறிப்பிட்டிருக்க, சந்திரன் நிற்கும் நிலைமைமாத்திரம் குறிப்பதில்லை. சந்திரனைப்போல் அடிக்கடி இடத்தைவிட்டுப் பெயராததினால் மற்ற கிரகங்கள் நிற்கும் நிலையை மாத்திரம் குறித்திருக்கிறார்கள். ஒரு தினத்தில் சந்திரனுடைய நிலையை யாதென்று தெரிந்துக் கொள்ளவேண்டுமானால், அன்றையதினத்து நக்ஷத்திரத்தைக் கொண்டு நிர்ணயிக்க வேண்டும். பஞ்சாங்கம் பார்க்கும்கால் வைகாசிமீ 27உ விசாகம் 23 - 20, என்று குறிப்பிட்டு இருந்தால், அன்றையதினம் உதயமுதல் 23 - 20, நாழிகைவரையில் சந்திரன் துலா

ராசியில், விசாகநட்சத்திரத்தில் சஞ்சரிக்கிறார் என்றும், 24-வது நாழிகையில் அனுஷநட்சத்திரத்தில் பிரவேசிக்கிறார் என்றும் கண்டறிய வேண்டும். இவ்வாறு பஞ்சாங்கத்தைக் கவனித்து, சந்திரகதியைத் தெரிந்து விதி விளக்கத்தின் உண்மையை அறியவேண்டும். நட்சத்திரத்தின் உண்மையான நிலையை, தற்காலத்திய வானசாஸ்திரதத்துவத்தில் ஏற்பட்டவரையில் தெளிவாக மேல் அதிகாரத்தில்கண்டிருக்கிறோம். நம்முன்னோர்கள், விதிவிளக்கத்திற்காக நட்சத்திரம் 27 - என்றும், அவைகள் ஒவ்வொன்றின் நான்கு பாதங்களிலும் சந்திரன் பிரவேசிக்கும்காலத்தில், இன்ன இன்னபலன் உண்டாகின்றனவென்றும், பொதுவாக, பல சோதிட நூல்களிலும் கண்டிருப்பது சிலருக்குத் தெரிந்த விஷயம். இப்படிப்பட்ட நட்சத்திரங்கள் 27-ம் கீழ்வருவன.

| | | |
|---|---|---|
| அசுவனி | பரணி | கிருத்திகை |
| ரோகிணி | மிருகசிரம் | திருவாதிரை |
| புனர்பூசம் | பூசம் | ஆயில்யம் |
| மகம் | பூரம் | உத்திரம் |
| அஸ்தம் | சித்திரை | சுவாதி |
| விசாகம் | அனுஷம் | கேட்டை |
| மூலம் | பூராடம் | உத்திராடம் |
| திருவோணம் | அவிட்டம் | சதயம் |
| பூரட்டாதி | உத்திரட்டாதி | ரேவதி. |

இவை, பன்னிரண்டு ராசிகளிலும் வியாபிக்கும் பாகங்கள், கீழேவரும் பதக்கத்தால் நன்றாய் விளங்கும். இதைச் சரிவர கவனித்துவந்தால் விதிவிளக்கத்திற்கு அதிக உதவியாயிருக்கும். இவைமனப்பாடமாகத்தான் இருக்கவேண்டும்.

ராசிகள்

| | |
|---|---|
| மேஷம் | அசுவனி (1) பரணி (1) கார்த்திகை $\frac{1}{4}$ |
| ரிஷபம் | கார்த் $\frac{3}{4}$, ரோகணி (1) மிருகசிரம் $\frac{1}{2}$ |
| மிதுனம் | மிருக $\frac{1}{2}$, திருவாதிரை (1) புனர்பூசம் $\frac{3}{4}$ |
| கடகம் | புனர்பூசம் $\frac{1}{4}$, பூசம் (1) ஆயில்யம் (1) |
| சிங்கம் | மகம் (1) பூரம் (1) உத்திரம் $\frac{1}{4}$ |
| கன்னி | உத்திரம் $\frac{3}{4}$, அஸ்தம் (1) சித்திரை $\frac{1}{2}$ |
| துலாம் | சித்திரை $\frac{1}{2}$, சுவாதி (1) விசாகம் $\frac{3}{4}$ |
| விருச்சிகம் | விசாகம் $\frac{1}{4}$, அனுஷம் (1) கேட்டை. (1) |
| தனுசு | மூலம் (1) பூராடம் (1) உத்திராடம் $\frac{1}{4}$ |
| மகரம் | உத்திராடம் $\frac{3}{4}$, திருவோ(1) அவிட்டம் $\frac{1}{2}$ |
| கும்பம் | அவிட்டம் $\frac{1}{2}$, சதயம் (1) பூரட்டாதி $\frac{3}{4}$ |
| மீனம் | பூரட்டாதி $\frac{1}{4}$, உத்திரட்டாதி (1) ரேவதி (1) |

பதக்கம் பார்க்க

| | | | |
|---|---|---|---|
| ரேவதி<br>உத்திரட்டா<br>பூரட் $\frac{1}{4}$ | அசுவனி<br>பரணி<br>கார்த்திகை $\frac{1}{4}$ | கார்த்திகை $\frac{3}{4}$<br>ரோகணி<br>மிருகசிரம் $\frac{1}{2}$ | மிருகசிரம் $\frac{1}{2}$<br>திருவாதிரை<br>புனர்பூசம் $\frac{3}{4}$ |
| பூரட்டாதி $\frac{3}{4}$<br>சதயம்<br>அவிட்டம் $\frac{1}{2}$ | நட்சத்திர பாத பதக்கம். | | புனர்பூசம் $\frac{1}{4}$<br>பூசம்<br>ஆயில்யம் |
| அவிட்டம் $\frac{1}{2}$<br>திருவோணம்<br>உத்திராடம் $\frac{3}{4}$ | | | மகம், பூரம்<br>உத்திரம் $\frac{1}{4}$ |
| உத்திராடம் $\frac{1}{4}$<br>பூராடம்<br>மூலம் | விசாகம் $\frac{1}{4}$<br>அனுஷம்<br>கேட்டை | சித்திரை $\frac{1}{2}$<br>சுவாதி<br>விசாகம் $\frac{3}{4}$ | உத்திரம் $\frac{3}{4}$<br>அஸ்தம்<br>சித்திரை $\frac{1}{2}$ |

இப்பதக்கத்தைக்கவனிக்கும்போது சிலநட்சத்திரங்கள் (1) கால்பாகத்தையும், (2) சில பாதி பாகத்தையும், (3) சில முக்கால் பாகத்தையும் முன் பின் வரும் ராசிகளுக்கு ஈன்று, தங்களுடைய மொத்த வியாபகம் இரண்டு ராசிகளிலும்

இருக்கின்றனவாகக் காணப்படும். இன்னும் கார்த்திகை, உத்திரம், உத்திராடம் இவை மூன்றும், கால்பாகத்தை ஒரு ராசிக்கு ஈந்து முக்கால்பாகத்தை இன்னொரு ராசிக்கு கொடுத்து இருப்பதை இப்பதக்கம் தெரிவிக்கும்: இம் மூன்று நட்சத்திரங்களுக்கும் 'காலற்றன' என்று பெயர். இதே மாதிரியாக மிருகசிரம், சித்திரை, அவிட்டம் இவை அரைபாகம் ஒரு ராசிக்கும் மற்றொரு அரைபாகம் இன்னொரு ராசிக்கும் கொடுத்து இரண்டுராசிகளிலும் வியாபித்திருக்கின்றன: ஆகவே இம் மூன்றுக்கும் 'உடலற்றன' என்று பெயர். இன்னும் புனர்பூசம், விசாகம், பூரட்டாதி இவை முக்கால் பாகத்தை ஒருராசிக்கும், மற்ற கால் பாகத்தை இன்னொருராசிக்கும் கொடுத்து, இரண்டு ராசிகளில் வியாபகமாகின்றபடியால் இவை மூன்றுக்கும் 'தலையற்றன' என்று பெயர்.

குறிப்பு:—மேற்கூறிய மூன்றுவித நட்சத்திரங்கள் நிஷேகத்திற்கும், மனைமுகூர்த்தத்திற்கும், யாத்திரைக்கும் கவனிக்க வேண்டியவை.

ஆகவே, கீழ்வரும் நட்சத்திரங்கள் முழுப்பாகத்தையும் ஒருராசியின் முழுதும் வியாபிக்கப்பெற்று இருக்கின்றன. இவைகளை விதிவிளக்கத்திற்கு அதிகமாய் கவனிக்க வேண்டும்: இவைகளில் நிற்கும் கிரகங்களுக்கு விசேஷ பலனுண்டு: அதின் நன்மை தீமை லக்னவஸாத்து ஏற்படும்.

| | | | |
|---|---|---|---|
| 1 | 2 | 3 | 4 |
| அசுவனி: | பரணி: | ரோகிணி: | திருவாதிரை: |
| 5 | 6 | 7 | 8 |
| பூசம்: | ஆயில்யம்: | மகம்: | பூரம்: |
| 9 | 10 | 11 | 12 |
| அஸ்தம்: | சுவாதி: | அனுஷம்: | கேட்டை: |

| 13 | 14 | 15 | 16 |
|---|---|---|---|
| மூலம்: | பூராடம்: | திருவோணம்: | சதயம்: |
| 17 | 18 | | |
| உத்திரட்டாதி: | ரேவதி: | | |

ஒரு ஜாதகத்தைக் கவனித்துக் காலபலன் என்ன வென்று காண வேண்டியதற்கு, நம்முன்னோர்கள் நட்சத்திர ரீதியாகக் கிரக திசை ஏற்படுத்தி இருக்கிறார்கள். ஜெனன கால நிலையில் பஞ்சாங்கத்தில் காட்டியிருக்கும் நட்சத்திரத் தைக்கொண்டு, பிறந்தகாலம் தொடங்கி நடக்கவேண்டிய திசையை, வானசாஸ்திர முறைப்படி நிர்ணயித்து இருக்கி றார்கள். அதின் விபரம் கீழே காட்டியிருக்கிறது: அப்படி காட்டியிருக்கும் விதத்தைக் கவனித்தால், அசுவனிமுதல் ஒன்பது நட்சத்திரத்திற்கும் ஒன்பது கிரகத்தின் திசையாக ஒரு முக்கியமான கிரமவரிசைப்படி ஏற்பட்டிருக்கின்றன. இப்படிக்கூடிய ஒன்பது கிரகங்களில், ராகு கேதுக்களாகிய சாயாவிதானத்தையும் கிரகங்களாக அமைத்து, சூரியன் முதல் ஏழுகிரகங்களுடன் சேர்த்து ஒன்பது கிரகங்களாகக் கணக்கிட்டிருக்கிறார்கள்.

## ராகு, கேது.

சந்திரன் மற்ற கிரகங்களைவிட, பூமிக்கு வெகு அரு காமையில் இருக்கிறது. ஆகையால், சந்திரன் மற்றெல்லா கிரகங்களுடைய கிரணங்களைத் தான் அடைந்து பூமிக்கு அருகாமையில் இருப்பதுபற்றி, பூமியில் இருக்கப்பட்ட தாதுப்பொருள்கள், ஜீவப்பொருள்கள், மிருகங்கள், மனிதர் கள் இவைகளுக்கு அந்த கிரணங்களின் இயல்பை அடையச் செய்கிறதினால், பலவிதமான பூமியில் காணப்பட்ட அதிசய சம்பவங்களுக்குக் காரணமாகிறது. ஆகையால் நம்முன்

னோர்கள் விதிவிளக்கத்திற்குச் சந்திரனை முக்கிய காரண மாக அங்கீகரித்திருக்கிறார்கள். அனுபவத்திலும் அப்படியே வருகிறது. அப்படிப்பட்ட சந்திரன், பூமியைச்சுற்றிவரும் பாதை ஒன்றுளது என்று வைத்துக்கொள்வோம். இப் படிப்பட்ட பாதையானது, ஆகாயத்தில் கீறி இருப்பதாக வைத்துக்கொண்டு ஆராய்ச்சிசெய்யுங்கால், கும்பமாசத்தி லிருந்து கடகமாசம், அதாவது மாசியிலிருந்து ஆடிமாதம் வரையில், அருக்கன்வீதி அல்லது சூரியன் பாதைக்கு வடக்காக அல்லது மேல்புறமாகச் சந்திரன்வீதி இருக்கும். சிங்கமாதம்முதல்கொண்டு மகரமாத ஆரம்பம் வரையில், சூரியன்பாதைக்குத் தெற்காக அல்லது கீழ்புறமாக அமை யும்.இதினால் சிங்கமாதம் அதாவது ஆவணிமீ முதல் தைமீ வரையில்சந்திரனுக்கு வலிவு அதிகம் கிடையாது. அதினால், சந்திரன் விதிவிளக்கத்தில் சில முக்கியமானபலன்களுக்குக் காரணமாக இருக்கிறது: இதுகாரணம்பற்றியே ஆவணிக்குப் பிறகு நம் இந்துக்களில் விவாகம் சாதாரணமாகச் செய்கிற தில்லை. இப்படி, மேல்காட்டிய சூரியன் பாதையும் சந்திரன் பாதையும் சந்திக்கும் நிலைகள் இரண்டு;அவையாவன,வடக்கு சந்திப்பு ஒன்று,தெற்கு சந்திப்பு ஒன்று.வடக்கு சந்திப்புக்கு ராகுநிலையென்றும், தெற்கு சந்திப்புக்குக் கேது நிலையென் றும் பெயர் நம்முன்னோரால் கொடுக்கப்பட்டிருக்கின்றன. இதுவுமன்றி, அந்தராகுகேதுக்களை ஒவ்வொரு கிரகமாகவும் அங்கீகரிக்கப்பட்டிருக்கிறது; ஆகையால் தான், நம் வான சாஸ்திரப்படி கிரகங்கள் ஒன்பதென்று ஏற்பட்டுவிட்டன.

பூமியானது, மேற்கிலிருந்து கிழக்கு பக்கமாக வான சாஸ்திரப்படி சுழண்டு வருவதினாலும், சூரியனைச் சுற்றிவரு வதினாலும், மேற்காட்டிய சந்திப்புகளின் இடம் ராசிக்கு ராசி மாறிக்கொண்டே வருகிறது. இப்படி மாறுவதினால் ஓர்குறிப்

பிட்ட இராசியிலிருந்து மறுபடி அந்த இராசிக்கு ராகு வருவதற்குச் சுமார் 18-வருஷம் 7-மாதமாகிறது.

நம்முன்னோர்கள், சந்திரன் ஒவ்வொரு ராசியிலும் சஞ்சரிக்கும்போதும், ஒவ்வொரு நட்சத்திரங்களில் சஞ்சரிக்கும் போதும், அந்தந்த நட்சத்திரத்தின் இயற்கை அமைப்பின் இயல்பினாலும், தற்கால நிலைமையினாலும் சந்திரன் இயக்கப்படுகிறனென்றும், அது காரணம்பற்றிச் சந்திரன் மூலியமாக மானிடர் விதி விளக்கமாகிறதென்றும், அப்படிப்பட்ட விதியை விளக்குங்கால் எந்தக் கிரகத்தின் அதிகாரம் நடக்கின்றதென்றும், அதைக்கண்டறிந்து அந்தந்த நட்சத்திரங்களுக்கு இந்தக் கிரகத்தின் திசை நடப்பு என்றும் அனுஷ்டானத்திற்கு வைத்துக்கொண்டு தற்காலவிதியை விளக்கலாமென்றும் அபிப்பிராயம்கொண்டு, கீழ் வருமாறு ஜோதிட சாஸ்திரத்தில் தெரிவித்திருக்கிறார்கள்.

| | | | | |
|---|---|---|---|---|
| அசுவனி | மகம் | மூலம் | கே | 7 |
| பரணி | பூரம் | பூராடம் | சு | 20 |
| கிருத்திகை | உத்திரம் | உத்திராடம் | சூ | 6 |
| ரோகிணி | அஸ்தம் | திருவோணம் | சந் | 10 |
| மிருகசீரிஷம் | சித்திரை | அவிட்டம் | செ | 7 |
| திருவாதிரை | சுவாதி | சதயம் | ரா | 18 |
| புனர்பூசம் | விசாகம் | பூரட்டாதி | குரு | 16 |
| பூசம் | அனுஷம் | உத்திரட்டாதி | சனி | 19 |
| ஆயில்யம் | கேட்டை | ரேவதி | பு | 17 |
| | | | | 120 |

மேல்காட்டிய திசைபலன், விதி விளக்கத்திற்கு மூலாதாரமாக இருப்பதால், இதை மனதில் நன்றாய் பதியச் செய்துகொண்டால், மேல்மேலும் கிரகங்களுக்கு இருக்கப்பட்ட அதிகாரத்தையும் அதின் பலனையும் யூகிக்கலாம்.

சோதிட சாஸ்திரத்தில், சகல அனுஷ்டானத்திற்கும், அனுப வத்திற்கும் சரிவரவருவது சந்திரன் இருக்கப்பட்ட நட்சத் திரத்தினால் ஏற்படும் திசைதான். அதாவது: அசுவனியில் பிறந்தவனுக்குக் கேதுதிசை; அந்தத் திசை 7-வருஷம் அதிகா ரம்பெற்று நடக்கும் என்று கொள்கை. ஆனால் பிறந்தகா லத்தில், அசுவனியில் அன்றைய ஆதி அந்த வியாபகம் நாழி கை முழுவதும் கேது திசையாகையால், ஜனனகால மணி நேரமோ, அல்லது நாழிகையோ, ஆதாரமாக வைத்தால், ஜெனனகாலத்தில் சென்ற நாழிகைபோக, செல்லவேண்டிய இருப்பு நாழிகை வீதமாகக் கேது திசை பாக்கி இருக்கும். இந்த விதமாக இப்போது சகல ஜோசியரும் அனுஷ்டித்து வருகிறார்கள்.

ஆனால், ஆராய்ச்சியில், திசைதத்துவத்தை நவக்கிரகங்க ளுக்கும் பொருந்தச் செய்வதினால், அதிலும் சில உண்மை யான பலன்கள் ஜாதகத்தில் கரதலாமலகம் போல் வெளி யாகின்றன: அதாவது சூரியன் அசுவனியில் கோசாரத்தில்நின் றால், சூரியனுக்குக் கேது 'சாயல்' உண்டாகிறதாக வைத்துக் கொள்வோம். அப்படி யூகித்துப் பார்க்கும் பட்சத்தில், காரக பாவபலன் சில தெளிவாக நிர்ணயிக்கப்படுகின்றது. அது என்ன வென்றால், ஜாதகத்தில் பிதுர்க்காரகனாகிய சூரியன் பலன் கேது ஜாதகத்தில் நிற்கும் பாவம்போல் யூகிக்கலாம். இவ்விதமாகவே, ஒவ்வொரு கிரகங்களையும் அவை ஒவ்வொன் றும் நிற்கும் நட்சத்திர நிலையைக்கொண்டு ஒருவாறு யூகிக்க, அந்தந்தக்கிரகஸ்தூலபலன் பாவபலன் இன்னதென்று யூகிக்க மார்க்கம் இருக்கிறது. இதை அனுஷ்டானத்தில் கண்டறிந்து இதின் விதிவிளக்கவிசேஷத்தை ஒப்புக்கொள்ள நியாயம் இருக்கிறது. மேல்காட்டிய தத்துவம் புதிதானதல்ல. அனேக ஜோசியர் அனுஷ்டானத்தில் இதை யூகித்து இதன் மூலிய

மாகத் தற்கால ஜாதகபலனையும், ஸ்தூலமாகமொத்த ஆயுள் பலனையும், ஒருவாறு சரிவர யூகிக்கிறார்கள். அனுபவத்தில் இந்த முறை சரியாகவும் இருக்கிறதை ஆராய்ச்சியில் யாறும் கண்டறியலாம். இதை ஒரு உதாரணத்தினால் தெளிவாக விளக்கலாம்.

| | | | |
|---|---|---|---|
| | | ல | |
| சனி ரா | ராசி. | | சுக் |
| | | | செ கே |
| | கு | புத | சூரி சந் |

| | |
|---|---|
| சூரியன் | விசாகம் |
| சுக்கிரன் | ஆயில்யம் |
| புதன் | சுவாதி |
| சந்திரன் | சித்திரை |
| செவ்வாய் | உத்திரம் |
| ராகு | பூரட்டாதி |
| குரு | அனுஷம் |
| சனி | பூரட்டாதி |

இந்த ஜாதகன் ரிஷபத்தில் பிறந்தவன்; லக்னாதி சுக்கிரன் ஆயில்யத்திலிருக்கிறார். ஆயில்யத்திற்குத் திசை விவரப்படி, புததிசையாகையால் சுக்கிரனுக்குப் புதன் சாயலாகிறது. அந்தப்புதன் ஆறாம்பாவத்தில் நிற்பதால், இந்த ஜாதகன் வியாபார சம்பந்தமுடையவன் என்றும், வித்யாகாரனாகிய புதன் ஆறில் நிற்பதால் படிப்பு விசேஷமில்லை என்றும் ஒருவாறு யூகிக்கலாம். இதை, ஜாதகன் வயது ஆக ஆகச் சரியாகவருகிறதா என்று கவனித்தால் இதன்உண்மை ஏற்படும். இதே மாதிரியாக மற்ற பாவங்களுக்கும் பார்த்துக் கொள்ளலாம்.

மேல்காட்டிய நட்சத்திர திசையில், ஏற்படும்பலன்களை விதிவிளக்கத்திற்கு எப்படி அனுஷ்டிக்கவேண்டிய தென்றால், உதாரணத்தில் நவக்கிரகவரிசையைக்கண்டால் அந்த

ஜாதகனுக்குப் பிறந்தகாலத்தில் செவ்வாய்திசை நடக்கும். செவ்வாய் உத்திரம் நட்சத்திரத்தில் இருந்தமையால் செவ்வாய் கிரகத்திற்குச் சூரியன் சாயல் அமையும். ஆனால் சூரியன் ஜாதகத்தில் கன்னியாகிய ஐந்தாம் பாவத்தில் இருப்பதால் பிதுர் பாவ பலன் நடக்கும். பிறகு ராகு திசை நடக்குங்கால், ராகு வானவர் பூரட்டாதியில் இருப்பதால் குருசாயல் அடைகிறார். அந்தக் குரு விருச்சிகமாகிய ஏழாம் ராசியில் இருப்பதால், வியாதி கண்டம் அத்திசையில் உண்டென்றும், ஊரைவிட்டுப் பிரதேசசஞ்சாரம் உண்டென்றும் விதிவிளக்கத்திற்கு ஒருவாறு யூகிக்கவேண்டும். இப்படியே மற்ற கிரகங்களுக்கும் பார்க்கவும்.

ஆனால் மேல்காட்டப் போகிற திதி அத்தியாயத்தில் சொல்லும் விதிகளையும், ஆராய்ச்சியில் ஏற்பட்ட விதிவிஷய ரகசிய பலனையும்கவனித்துத்தான் பலன்களைத்தீர்மானமாகக் கண்டறியவேண்டும்: இந்த விதிவிளக்கசாஸ்திரத்தின் மகிமை எவ்வளவும் ஒருவாறு கணக்கில் அகப்பட்டதாகத் தோன்றின போதிலும்,"பிரபஞ்ச சிருஷ்டியில் இருக்கப்பட்ட வேறுபாடு நிலைமையும் கிரகங்களில் ஒன்றுக்கொன்று நிலை வித்யாச மேம்பாடுகளும் பலவாறாக ஜாதகத்தில் ஏற்படுவதால்,எல்லாவற்றையும் சரிவர கவனித்தே உண்மையான பலனை யூகிக்க வேண்டும்." இதுவிஷயம் அதிகமாகஅனுபோகத்திலும், பயிற்சியிலும், புத்தி நுட்பத்தினாலும் அப்போதைக்கப்போது நடந்துவரும் பலன் சாட்சியாலும் நன்கு புலப்படும்.

மேல் சொல்லிய 27-நட்சத்திரங்களில், சில நட்சத்திரங்கள் ஜெனனகாலத்தில் இருந்தே மிகக்கொடிய பலனைத் தரும். அப்படிப்பட்ட நட்சத்திரத்தில் யோகவான் பிறந்தாலும், ஆயுளில் பிற் பாகத்தில் கஷ்டப்பட்டே தீர வேண்டும். அவை கீழ்வருமாறு. இவை பொது.

(1) அசுவனி. (2) மகம். (3) மூலம். (4) கேட்டை. இந்த நான்கு நட்சத்திரங்களுடன் சந்திரனுக்கு க்ஷீண கதியும் உண்டானால் பலன் எல்லாவிதத்திலும் கெடுதல்.

இதுவன்றி, ஜோதிடசாஸ்திரத்திற்காக முன்னோர்களால் தீர்க்கமாகக் கண்டறியப்பட்ட கெட்ட நட்சத்திரங்களாவன: பிறந்தகால நவக்கிரக நிலையிலும், லக்ன நிலையிலும் சந்திர நிலையிலும் அமைந்தவை அஷ்டமராசிக்கூறு நட்சத்திரங்கள். இவை ஒவ்வொருவருக்கும் பொதுவாகக் கெட்டபலனையே தரும். இவை ஜென்ம நட்சத்திரம் முதல்கொண்டு நடக்கும் திசைக்கிரகம் ஜாதகத்தில்நிற்கும் நட்சத்திரஎண்ணிக்கையில் 16-வது, 17-வது, 18-வது நட்சத்திரங்களே. இதை அந்தந்த ஜாதகத்தைக்கவனிக்கும்போது கண்டறியவேண்டும். அப்படி கவனித்துப் பலனை யூகித்தால் விதி விளக்கமாகும்: எவ்வாறு திசைக்கிரகத்திற்கு யூகிக்கிறோமோ அவ்வாறே புத்தி அந்தர கிரகங்களின் நிலையைக் கணக்கிட்டு பலன் தெரிந்து கொள்ள மார்க்கமுண்டு. ஆனால் திதிஅதிகாரம், யோகாதிகாரம், இவைகளில் சொல்லப்படும் விதிகளையும் சரிவரகவனிக்கவேண்டும். திதியையும் யோகத்தையும் கவனியாமல், தற்காலஜோசியர்கள் திகைத்தப்பின மரக்கலம்போல் பிரபஞ்ச பௌதிக சமுத்திரத்தில் தங்கள் நிலையாகிய தற்கால பலனைக் கண்டறிய முடியாமல் கஷ்டப்படுகிறவர்கள் அனேகர்.

* கிரகங்கள் எப்படி வேதைராசிகளில் ஒன்றுக்கொன்றுநின்று வேதைபலனைத் தருகின்றனவோ, அவ்வாறே வேதை நட்சத்திரங்களும் உண்டு. அவைகளை ஒவ்வொரு கிரகங்களின் வேதை நட்சத்திரங்களைக்கொண்டே கவனிக்க வேண்டும்: அவை கீழ்காட்டியுள்ளன.

---

* அனுபந்தம் - கிரக பதக்கம் பார்க்கவும்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| சு | 7 | 10 | 15 | 21 | |
| செ | 7 | 10 | 15 | 21 | |
| பு | 8 | 18 | 24 | | |
| கு—சு | 7 | 9 | | | |
| சனி | 5 | 6 | 10 | 11 | 20 |
| ரா—கே | 7 | | | | |

இவைகளை எப்படி அனுஷ்டிக்கிறதென்றாலோ, மேல் காட்டிய உதாரணத்தில் சனி பிதுர்பாவாதியாகியும் தசமஸ்தானாதியாகியும் பூரட்டாதி நட்சத்திரத்தில்நிற்கிறார். தனகாரகனாகிய குரு சப்தமத்தில் அனுஷநட்சத்திரத்தில் இருக்கிறார். ஆகவே, பூரட்டாதியில் இருந்து எண்ணுங்கால் அனுஷம் 20-வது நட்சத்திரமாகும். ஆகையினாலே, இந்தச் சாதகருக்குத் தனபலன் இல்லையென்றுசொல்லக்கூடிய அற்ப பலன். அதாவது லௌகிக பொருள் மார்க்கமாக ஜாதகருக்கு பிதுர்மூலமாகவோ, அல்லது வேறுமார்க்கமாகவோ பலன் கிடையாது. ரிஷபத்திற்குச் சனி சூரியன் இந்தஇரண்டு கிரகங்களும், சுபக்கிரகங்களானபோதிலும், அவை ஒன்றுக்கொன்று வேதை நட்சத்திரத்தில்நிற்பதால், வேதைபலன் உண்டாகும்: இப்படியே மற்ற கிரகங்களுக்கும் யூகித்துக் கொள்ளவும். சாதாரணமாகவும் பொதுவாகவும், எட்டாவது (8) ராசியில் நின்ற கிரகங்கள் ஒன்றுக்கொன்று வேதை பலனேதரும். ஆனால் இரண்டு இராசிக்குறிய கிரகம் இப்படி அமர்ந்தால் அப்போது பலன்கள் வேறு.



## 6 - ஆம் அத்தியாயம்.

## சூரியசந்திர விதிவிளக்கமுறை.



### திதி விசேஷம்.

ஜோதிட சாஸ்திரத்திற்குத் திதியின் விசேஷத்தைப் பற்றியும், அதன் இன்றியமையாமையும் எந்தக் காவியங்களிலும் சொல்லப்படவில்லை. ஆனால், வருஷாதிநூல் என்ற புஸ்தகத்தில் திதியின் நன்மை தீமை இவைகளைத் தினசரி வர்த்தமானங்களுக்கு வேண்டியவகையில், முகூர்த்த விதானங்களுக்கு அனுகூலமாக சில திதிகள் வேண்டுமென்றும், சில திதிகள் கூடாதென்றும் குறிப்பிட்டிருக்கும் விஷயம் எல்லோருக்குந் தெரிந்தது.

தென்னிந்தியாவில், அனேகமாக, புராதன கல் சிலைகளில், ஸ்தம்பங்களில், செப்பேடு புராதன செப்புத்தகடு சாசனங்களில், அனேகமாய் திதி யோகம் நட்சத்திரங்கள், இவைகளைக் குறிப்பாகக் காட்டியிருக்கின்றன. தவிர, தேதியும் கிழமையும் அனேகமாக கி. பி. நானூறு ஆண்டுகளுக்கு முன்வழக்கத்தில் கிடையாதென்பது காலஞ்சென்ற L. D. சுவாமிகண்ணுப்பிள்ளையாகிய வானசாஸ்திர கணித நிபுணரதுதாற்பரியம்: இது விஷயமாக, சிலாஸாஸனம், செப்புத்தகடு ஸாஸனம் இவைகளை வாசித்துப்பார்க்க விசிதமாகும் என்று சொல்லுகிறார். முற்காலத்தில் ஆண்டு, அல்லது வருஷம் திதி யோகம் இவை குறிப்பிட்டே ஒரு விசேஷ வர்த்தமானங்களை எக்காலத்தும் பிரபலமாகும்படி செய்வது வழக்கம்: மதுரை

தேவஸ்தானத்திலும், ராமேஸ்வர தேவஸ்தானத்திலும் இன்னும் வடக்கே அனேக இடங்களிலும் உள்ள சிலாசாசனங்களைக் கவனித்தால் இது விஷயம் விசிதமாகும்: ஆகவே நம்முன்னோர்களுக்குத் திதியும், யோகமும்முக்கியமானவையே யொழிய தேதி வாரம் அவ்வளவு முக்கியமானவையல்ல.

நம்இந்துக்களின், உபயோகத்திற்காக தற்காலம் தென்னிந்தியாவில் வெளியிட்டுவரும் பஞ்சாங்கங்கள் ஒவ்வொன்றிலும், சூரிய சந்திரர் சம்பந்தமான விஷயங்களே அடங்கியிருக்கின்றன. வடதேசத்தில் சாந்திரமான கணிதமும், தென்தேசத்தில் அனேகமாய் சௌரமான கணிதமும் வழங்கிவருகின்றன: ஆனாலும், பஞ்சாங்கத்தில் உள்ளவை அவ்வளவும், சூரியசந்திரர்கள் சம்பந்தமாகவே இருக்கின்றன: ஆகையால் பூலோகத்திற்கு இரண்டு கண்போன்ற இவைகள், விதிவிளக்கத்திற்கு, முக்கியமானவை யாகின்றன: இவைகளின் நித்திய சரகதியினால், ஏற்படுவது திதி. திதி என்பது, சம்ஸ்கிருத வார்த்தை: அது சூரியனிலையில் இருந்து கணக்கிடப்பட்ட சந்திரநாள் ஒன்றைக் குறிக்கிறது. ஆனால் மற்ற நாளுக்கும் இந்த நாளுக்கும் வித்தியாசம் என்னவென்றால், சூரியனால் உண்டாவது பகல்மானம், இரவுமானம்: சூரியசந்திரகதியினால் உண்டாவது திதி நாள். அது பகலிலும் ஆரம்பிக்கும், இரவிலும் ஆரம்பிக்கும். ஆகவே ஒரு தினத்தில் இரண்டு திதி சம்பவிக்கும். சுமார் 58-நாழிகைக்கு ஒரு திதி வியாபகமாவதால், திதி உதயம், நடுப்பகலிலும், நடு இரவிலும், உதயத்திலும் சாயங்காலத்திலும் ஆரம்பிக்கும். நம்முன்னோர்களுக்கு இத்திதி, ஒரு குறித்தகாலத்தின் நன்மை தீமைகளையும், சுபத்தையும், நிச்சயிப்பதற்குச் சூரியசந்திரர்கள் சாரங்களே உத்தமமான ஆதாரங்களாகும். யக்ஞங்கள், தர்ப்பணங்கள்,

விவாகங்கள் செய்யும் காலத்தில், நம்சாஸ்திரப்படி முக்கிய மாகச் சூரியகிரகத்திற்குச் சமர்ப்பிக்கப்படுகின்றன.

## இந்துவிரதமும், திதியும்.

இன்னும் திதியின் விசேஷம் என்னவெனில், நம் இந்து மத அனுஷ்டானத்தில் இருக்கப்பட்ட விசேஷ விரதமும், இறந்தகால திதி அனுஷ்டானம், சில நட்சத்திர சம்பந்த மான திதிகள், சங்கராந்தி சம்பந்தப்பட்ட திதிகள்; ராமாய ணம், மஹாபாரதம் இப்பெருங்காவியத்தில் முக்கியமான வீரர்கள் முனீஸ்வரர், ஆசாரியர்கள் இவர்கள் பிறந்த அல் லது இறந்த திதிகளையும் கவனிக்க, இவைநம்மதத்திற்கும், நித்திய அனுஷ்டானத்திற்கும் எவ்வளவு அவசியமானவை என்றும் ஏற்படும்: அதன்றியும், ஒவ்வொரு இந்துவும் இறந்தகால திதியை அனுஷ்டித்தே பெரியோர்களுக்குச் சிரார்த்தம், தர்ப்பணம்முதலியவை செய்வதென்று எல்லோ ருக்கும் நன்குய்தெரிந்த விஷயம்: அப்படியிருக்க, பிறந்தகால த்தன்று சந்திரநாளாகிய திதியை விதிவிளக்கத்திற்கு அனு ஷ்டிப்பதில்லை: இதன் காரணம் புலப்படவில்லை. இன்னும் திதியின் விசேஷத்தைப்பற்றியும், அதை அனுசரிப்பதால் நாம் அடையும் நன்மைகளை உத்தேசித்தும் நம்முன்னோர் கள் ஏற்படுத்தி இருக்கும் விரதங்களையும் முக்கிய பண்டிகை களையும் கீழ் காட்டியிருப்பதை நன்குக கவனிக்கவும்: இவை அனேக விரதங்களில் சில:

(1) கணேச சதுர்த்தி அல்லது விநாயக சதுர்த்தி (4)
(2) ஸ்கந்த ஷஷ்டி (6)
(3) ரதசப்தமி (7)
(4) கிருஷ்ணஜயந்தி அல்லது கிருஷ்ணாஷ்டமி (8)
(5) ஸ்ரீராமநவமி (9)

(6) மஹா சிவராத்திரி, மஹா சதுர்த்தசி (14)
(7) சித்திரா பௌர்ணமி (15)
(8) மாளய அமாவாசை அல்லது சர்வபிதரு அமாவாசை (15)

## திதியும் கிரக நிலையும்.

ஆகவே தீர்க்கமாக விதி விளக்கத்திற்குத் திதியை அனுஷ்டிக்க வேண்டும்: நம் ஆராய்ச்சியில் திதியினால் ஏற்படும் நவக்கிரக பலன்கள் வெகு வலிவுள்ளனவாய் இருக்கின்றன. மேலும் இத்திதியினால், நவக்கிரகங்களுக்கு இருக்கப்பட்ட நன்மை தீமைபலன்களும், தீமையாகத் திதியினால் அமைந்த அப்படிப்பட்ட கிரகங்களுக்கும், எக்கதியில் அவைகள் நன்மையோ, அல்லது இஷ்டப்ராப்தியோ, செய்கின்றனவென்றும், தீமையோ அல்லது மாரகமோ எப்போது செய்கின்றன வென்றும், எக்காலத்தில் யோகம் அதாவது, ஒரு ஜன்மாவின் லௌகிக அந்தஸ்துபொருள், சொத்து, க்ஷேமம், இவைகளுக்குத் தீமையையோ, அல்லது க்ஷேமத்தையோ, விளைவிக்கின்றனவென்றும் ஏற்படுகின்றன. அதுவன்றி அந்தக் கிரகங்களுக்கும் தாங்கள் இருக்கப்பட்டபாவத்திற்கும் அனேகமாய் சம்பந்தமில்லாமலே தங்களுக்குத்திதியினால்ஏற்பட்ட வேதைபலன் நடந்தேறி வருக்கின்றன: அதாவது, பஞ்சமத்தில் இருக்கும் கிரகம் மாரகம் செய்கின்றது. கிரக சட்பல கணிதம் பலாபலன் தெரிவிப்பதை விட, திதியினால் ஏற்படும்பலன் மிக முடிவாக இருக்கின்றது: தற்காலம் வழங்கிவரும் ஜாதகசாஸ்திரப்படி, தற்காலம் நடந்தேற வேண்டிய சில குறிப்புப் பலன் தவறி, வேறுவிதமான பலன்கள் நடப்பதையும் திதியின் மூலியமாக விசிதமாக அறியலாம்: இதை வாசிப்போர் ஒவ்வொருவரும், தங்கள் தங்கள் ஜாதகத்திற்கு இதில் அதிககுறிப்பாகக் காட்டியவற்றை, மிக நுட்பமாகக் கவனித்து, நாளுக்கு நாள் பலனை யூகித்து வந்

சால், தங்களுக்கே இதில் இருக்கப்பட்ட தெய்வீக ரகசிய நன்மை தீமை நன்ருய் தெரியும்.

## நாடிக்கிரந்தம்.

நாடிக்கிரந்தம் எழுதிய கிரந்தகர்த்தாக்கள், திதியின் உண்மை அறிந்தே பலன் எழுதியிருக்க வேண்டும் என்று அடிக்கடி ஆராய்ச்சியில் ஏற்படுகின்றது: ஆனல் நாடிக்கிரந்தம் எழுதிய நாட்கள் தொடங்கி, நாளதுவரையில் விதிவிளக்க ஆராய்ச்சி யில்லாமையாலும், பூர்வீக கிரந்தங்களுக்கு ஓர்வித மகிமை உண்டென்று கருதி, மேல் மேலும் ஆராய்ச்சி செய்து விதிவிளக்க சாஸ்திரத்தை விருத்தி செய்யாததினுலும், தற்காலத்தில் 'சோதிடம்' அதிகமாகப் பலிதமாகிறதில்லை. ஏனெனில், தினப்படி சரகதியினுல் கிரகங்கள் ஒரே மாதிரியாக நாளுக்குநாள் நகர்ந்துக் கொண்டே தங்கள் தங்கள் சரகதிகளை அடைந்துகொண்டே போனபோதிலும், அவைகள் ராசிநிலையில் மாத்திரம் ஒருகாலத்தில் இருந்தவாறு வருகின்றனவே ஒழிய, அச்சநிலையில் அதாவது தாங்கள் நிற்கும் நட்சத்திர நிலையில், ஒன்றுக்கொன்று ஒரு நாள் இருந்ததைப்போல் மறுநாள் அமைகிறதில்லை என்ருலும், அப்படி ஒருக்கால் அமைவது 10000 - பதினுயிரம் ஆண்டுக்கொரு முறை யென்ருலும் 'நவக்கிரகதத்துவம்' நாளுக்குநாள் வேறுபடுவது சொல்லவேண்டுமோ? அப்படி நிலை வேறுபாடு அடையும்போது நவக்கிரகங்களின் பலனை ஒருவாறு பழய நூல்களைக்கொண்டு சரிவர பிசகில்லாமல் கணிப்பது எப்படி? நாம் சென்ற அனேக நூற்ருண்டாக சும்மா இருந்துவிட்டு, ஜீவகாலத்திற்கு எல்லாம், பொதுவாக நம் முன்னோர்கள் ஜோதிட சாஸ்திரம் பயன்படும் என்று கருதினுல், அது நம்பிழையே யொழிய நம் முன்னோர்கள் பிழை அல்ல: ஆராய்ச்சியில்லா

மலே விதிவிளக்கம் என்ற இச்சோதிடசாஸ்திரம் தற்காலத்தில் பொய்த்து விடுவதாக ஏற்படுகின்றது. இதல்லாமல் அப்படிப்பட்ட சாஸ்திரம் உண்மையில் நமக்கு முழுதும் பயன் படுகிறதில்லை. ஆதலால், திதியின் விசேஷம் ஜாதகத்திற்கு உண்டென்று கருதி, நாளுக்குநாள் எல்லாவிடங்களிலும் அவசியம் ஆராய்ச்சி செய்ய வேண்டியது. இவ்வித ஆராய்ச்சிக்கு உதவியாக, இனிமேல் கார்போரேஷன் கவுன்சிலர்கள், முனிசிபாலிடியார், யூனியன் மெம்பர்கள், இவர்கள் அனைவரும் நம்பழைய பேர்பெற்ற விதிவிளக்க சாஸ்திரத்திற்கு அனுகூலமாகும்படி இப்போது, நடந்தேறி வரும் சட்டப்படி பிறப்புத்தேதி இறப்புத்தேதி இத்துடன் சேர்ந்த சிலக்குறிப்புகளும் முனிசிபாலிடியிலும் யூனியனிலும் எழுதிவைப்பதுடன், இறப்பு பிறப்பு நடந்தேறிய "மணி நேரமும்" குறிக்கச் சட்டம் ஏற்படுத்தி விட்டால், எங்கெங்கும் ஆராய்ச்சி செய்ய விதி விளக்கத்திற்கு அதிகமான பேருதவியாக இருக்கும். இப்படியே, கவர்ண்மெண்டு பிரசவசாலையிலும் நடக்கவேண்டும். திதியினால் சோதிடசாஸ்திரத்திற்கு ஏற்படும் மேன்மையை, அதினால் விளங்கும் சில முக்கிய தெய்வரகசிய கோட்பாடுகளைக் கண்டறிந்த பிறகாவது, நம்மவர்கள் எல்லாவிடங்களிலும் ஆராய்ச்சிக்கு ஏற்பாடு செய்வார்கள் என்று நம்புகிறேன். அனேக நூற்றாண்டாக ஆராய்ச்சியில்லாமல்,மண்மூடின பொக்கிஷம் போல் கிடக்கும் இக்கிரந்தம் தெய்வீகத்தன்மையுடையதென்பது ஆராய்ச்சியில் விளங்கும்.

இனி, திதியை விதிவிளக்கத்திற்காக எல்லோருக்கும் பயன்படுமாறு விளக்குகின்றேன். முன்னமேசொல்லியவாறு, திதிஎன்பது சந்திரனால்உண்டாகிய நாள். ஆகவே திதி, அமாவாசை தொடங்கி மறு அமாவாசை வரையில் நடக்கிறது:

ஆனால், நம் முன்னோர்கள், வளர் பிறை தேய்பிறை இவைகளைக் கவனித்து இரண்டு பட்சம் ஏற்படுத்தி, பக்ஷம் ஒன்றுக்கு பதினைந்து திதியாக வகுத்திருக்கிறார்கள்: சந்திரன் தன் சரகதியினால் உண்டாக்கும் கால அளவு ஓர் வானசாஸ்திரச் சிறப்பு உட்பிரிவு. திதி என்பது சூரியனுக்கும் சந்திரனுக்கும் உள்ள தூரத்தைக் குறிக்கின்றது. அமாவாசை தினத்தில் சூரியனும் சந்திரனும் ஒரே ராசியில் ஒரே நட்சத்திரமண்டலத்தில் இருப்பதாக விதிவிளக்கத்திற்கு ஆதாரமாக வைத்துக்கொள்ள வேண்டியது. பௌர்ணமி தினத்தன்று ஒருவருக்கொருவர் நேராக180-பாகைதூரம் விலகி இருக்கிறார்கள்.

ஆகவே, சந்திரன் நித்ய ஓயாகதியினால் ஏற்படும் சந்திர நாள், அல்லது திதியின் பதக்கம், கீழே காட்டியிருக்கிறது.

| | அமாவாசை ௦ | நா: | நா: நா: | பௌர்ணிமா | |
|---|---|---|---|---|---|
| 1 | பிரதமை | 58 | 0 —58— | பிரதமை | 1 |
| 2 | துவிதியை | 116 | 1 —56— | துவிதியை | 2 |
| 3 | திரிதியை | 174 | 2 —54— | திரிதியை | 3 |
| 4 | சதுர்த்தி | 232 | 3 —52— | சதுர்த்தி | 4 |
| 5 | பஞ்சமி | 290 | 4 —50— | பஞ்சமி | 5 |
| 6 | சஷ்டி | 348 | 5 —48— | சஷ்டி | 6 |
| 7 | சப்தமி | 406 | 6 —46— | சப்தமி | 7 |
| 8 | அஷ்டமி | 464 | 7 —44— | அஷ்டமி | 8 |
| 9 | நவமி | 522 | 8 —42— | நவமி | 9 |
| 10 | தசமி | 580 | 9 —40— | தசமி | 10 |
| 11 | ஏகாதசி | 638 | 10 —38— | ஏகாதசி | 11 |
| 12 | துவாதசி | 696 | 11 —36— | துவாதசி | 12 |
| 13 | திரயோதசி | 754 | 12 —34— | திரயோதசி | 13 |

| | | நா: | நா: நா: | | |
|---|---|---|---|---|---|
| 14 | சதுர்த்தசி | 812 | 13 —32 | சதுர்த்தசி | 14 |
| 15 | பௌர்ணமி | 870. | 14 —30. | அமாவாசை | 15 |

குறிப்பு: நா=நாழிகை: நா=நாள்.

இவ்வாறு, அமாவாசையிலிருந்து வளர்பிறையில் கணக்கிட்டால், பிறந்த தேதியில் இன்ன திதி யென்று சுமாராக ஏற்படும்: இங்கே ஒரு திதிவியாபகம் நா: 58-ஸராஸரிகணக்கு என்பது வானசாஸ்திர துல்லிய கணக்கல்ல என்று அறியவும்.

உதாரணம்: ஒரு பஞ்சாங்கப்படி ஆங்கீரஸ௵ ஆடி௴ 18௳ அமாவாசை 23-நாழிகை 5-விநாடி முடிவு ஆனால், அம் மாதம் பௌர்ணமிமுடிவு ஆடி௴ 32-௳ நாழிகை 53-விநாடி 5-ஆகும்:

தேதி. நா. வி.

18 23 5
14 30

கூட்ட 32-53-5 அந்தவருஷத்தில் ஆடி௴ 31௳ யாகையால் ஆவணி௴ 1௳ 53-5 நாழிகை வரையில் பௌர்ணமி வியாபகம்: ஆனால் இது கணித துல்லிய நாழிகை ஆகாது: இம்முறையில் சற்றேறக்குறைய ஜெனன மணிநேரத்தில் இன்னதிதி என்று சுமாராக கணக்கிடலாம். மேலே காட்டிய உதாரணப்படி, ஆங்கீரஸ௵ ஆடி௴ 31௳ சதுர்த்தசி நா 19. வி 25. ஆகையால் அன்று பௌர்ணமி இருப்பு நா 40. வி 35. ஆகும். மறுநாள் அதாவது ஆவணி௴ 1௳ பௌர்ணமி இருப்பு நா 18. ஆகவே, பௌர்ணமி ஆதி அந்தம் 58 - 35 ஆகும். வித்தியாசம் நா 5-30 ஆகும் (ஆனந்தபோதினி பஞ்சாங்கம் பார்க்கவும்.)

இனி இரண்டுபட்சத் திதிகளையும், அவைகளுக்குப்பொதுவாகச்சொல்லப்பட்ட பொதுப்பலன்களையும், கீழ்கண்டவாறு அறிக. இவைஸம்ஸ்கிருதகிரந்தத்திலிருந்துஎடுக்கப்பட்டன.

## இன்ன திதியில் பிறந்தவர்கள் இன்ன குணமுடையவர்களெனல்

(1) பிரதமை—உழைப்பாளி, சன்மார்க்க நடையுள்ளவன்.

(2) துவிதியை—சிறப்பும் மேன்மையும் உள்ளவன், ஆடு மாடு உடையவன், கீர்த்தி உள்ளவன்.

(3) திரிதியை— சன்மார்க்கன், பயங்காளி, கீச்சென்ற தெளிவான குரலுடையவன்.

(4) சதுர்த்தி— எளிதில் மோசம்போகிறவன், திரிச்சல் பிரியன், பழய சாஸ்திரப் பிரியன்.

(5) பஞ்சமி— சாஸ்திர விருப்பன், மோகி, இளைத்ததேகன், அமைதியற்றவன்.

(6) சஷ்டி— கொஞ்சம் வலிவுள்ளவன், ராஜரீகஅந்தஸ்து உடையவன், புத்திசாலி, கோபி.

(7) சப்தமி— உரத்தகுரலன், வலிமைபெற்றவன்.

(8) அஷ்டமி— காமாதுர முள்ளவன், பெண்டு பிள்ளைப் பிரியன்.

(9) நவமி— பிரக்யாதியானவன், அழகானபுருஷன், கெட்டபெண்டுபிள்ளைகள்உடையவன், காமி.

(10) தசமி— சன்மார்க்க நடையன், சுத்த குரலன், பெண்டு பிள்ளை உடையவன், தனவந்தன், செழிமை யுடையவன்.

(11) ஏகாதசி— தெய்வீகன், வேலைக்காரர் தனமுடையவன்.

(12) துவாதசி— தயாளவான், தனிகன், செல்வமுடையவன்.

(13) திரயோதசி—பேராசையுள்ளவன், செல்வமுள்ளவன், புத்தியில்லாதவன்.

(14) சதுர்த்தசி— பிறர்செல்வத்தில் ஆசையுள்ளவன், பிறர் மனை இச்சிப்பவன்.

இதில், அமாவாசையையும், பௌர்ணமியையும் காணுட விருப்பதைக் கவனிக்கவும்: இதற்குக்காரணம் சொல்லப்படா விட்டாலும் ஆராய்ச்சியில் மேல் சொல்லிய அமாவாசை பௌர்ணமி திதியில், உதித்தால்லக்னவஸாத் நவக்கிரக நிலை போல் பிறப்பு, அமைப்பு, குணமுதலியன அமைகின்றன என்று ஏற்படுகிறது. நவக்கிரகங்களுக்கு உள்ள இயற்கை சுபாசுப பலன்கள் முழுமையும் அவைகளில் பிறந்தவர் களுக்கு நடக்கும். நவக்கிரகங்கள் சுபர் சுபராகவும், பாபர் பாபராகவும் பலன்களை அவைநிற்கும் பாவம்போல் கொடுப்பர்.

## திதியினால் நவக்கிரக லக்ஷணம்.

வருஷாதிநூல் என்று சகலரும் அறிந்த சிறு புஸ்தகத் தில், திதி சூன்யராசி என்பதை அனேகர் கண்டிருக்கலாம். அதில் கீழ்காட்டியவாறு சில ராசிகள் சில திதிகளில் சூன்யம் என்று காட்டியிருக்கின்றன. திதி விசேஷத்தை மேல் சொல் லிய காரணங்களால் இதில் என்ன சூன்ய விசேஷமென்பதை ஆராய்ச்சி செய்ததில், அனேக காலங்களாக ஒன்றும் ஏற்ப டாமல், கடைசியாக ஜீவ்ய கால நடப்பு பலனைக்கொண்டு, அவரவர்களுடைய பிறந்த ஜாதகத்தைப் பலவிதமாக பரிசோ தனை செய்ததில், திதியினால் சில முக்கியமான ஜோதிட ரகசி யங்கள் ஏற்பட்டன. அதே மாதிரியாக, அனேகரும் நடக்கும் கால பலனுக்கும், ஜாதக கிரகநிலை திசைலக்கினம் முதலியவை களுக்கும், இருக்கப்பட்ட சம்பந்தத்தை யூகித்துக் கவனித்து வந்தால், திதியின் விசேஷம் ஏற்படுமென்பதற்கு யாதொரு சந்தேகமும் கிடையாது. ஆனால் அப்படி காணுவாருண்டோ?

| திதிகள். | ராசிசூன்யம். | ஆட்சிக்கிரகம். |
|---|---|---|
| பிரதமை | மகரம்— துலாம் | சனி— சு |
| துவிதியை | தனுசு— மீனம் | கு— கு |

| | | | |
|---|---|---|---|
| திரிதியை | மகரம்— | சிங்கம் | சனி— சூ |
| சதுர்த்தி | கும்பம்— | ரிஷபம் | சனி— சு |
| பஞ்சமி | மிதுனம்— | கன்னி | பு— பு |
| சஷ்டி | மேஷம்— | சிம்மம் | செ— சூ |
| சப்தமி | தனுசு— | கடகம் | கு— சந் |
| அஷ்டமி | மிதுனம்— | கன்னி | பு— பு |
| நவமி | சிங்கம்— | விருச்சிகம் | சூ— செ |
| தசமி | ௸ | | சூ— செ |
| ஏகாதசி | தனுசு— | மீனம் | கு— கு |
| துவாதசி | மகரம்— | துலாம் | சனி— சு |
| திரயோதசி | ரிஷபம்— | சிம்மம் | சு— சூ |
| சதுர்த்தசி | மீனம்— மிதுனம்<br>தனுசு— கன்னி | | கு— பு |

ஆனால், அமாவாசை, பௌர்ணமிகளில் ஜெனனமான வர்களுக்கு லக்னவஸாத் சந்திரவஸாத் கால திசைபோல் பலன் நடக்கும்.

## திதி கிரக விளக்கம்.

மேல் காட்டிய பதக்கத்தில், பிரதமையில் ஜெனன மானவர்களுக்கு மகரமும் துலாமும் "சூன்யராசிகள்" என்று ஏற்படுகின்றன. ஆகவே, அந்த இரண்டு இராசிகளுக்கு உரிய ஆட்சிக் கிரகங்களான 'சனி—சு' இவை இரண்டும் ஜாதகத்திற்குச் சூன்ய பலனைக்கொடுக்க அதிகாரமுடையவர். கள். சூன்யபலனாவது, காரியவிக்னம் முதலிய பலவிதமான கெடுதல் பலனைக் கொடுப்பது. அஷ்டலக்ஷ்மியும் பொ ருந்திய ஒரு ஜாதகனுக்குக் கெடுதல் பலன் என்றாலும் சூன்ய பலனென்றாலும், சம்பத்து குறைந்தும் தரித்திர திசையடைந்தும் மிகவும் கஷ்ட முண்டாகலாம். ஆனால்

அப்படிப்பட ஜாதகன் பிச்சைக்காரனுகில், அவனுக்கு எந்தச் சூன்ய பலன் நடக்கும் என்முல், வியாதி, சோம்பல், ஞான சூன்யம், ஆயுள், அங்கம்குறைவு முதலியவை கொடுக்கும். ஆகவே சூன்யமென்முல், எந்த ஜீவநிலைமையில் ஜெனனம் ஆரம்பிக்கிறதோ, அந்த நிலைமையில் பலவித கெடுதல் பலன் நடப்பதுதான் சூன்யபலன். இதைப் புத்தி நடுநிலைமை யோடும், ஜெனனகால உற்முர் சுற்முர் சம்பத்து இருப்பிடம் இவைகளோடும் கூடிய ஜென்மா நிலைமையையும், அனுசரித்துப் பலனை யூகிக்க வேண்டியதவசியம். இதனுல், 'சூ'—'சனி' இப்படிப்பட்ட கிரகங்களுக்கும், இவை அமைந்த பாவங்களுக்கும், இவைகளுக்கு இயற்கையாய் அமைந்த பாவங்களுக்கும், வெகுவிதமான நன்மை தீமைபலன் நடப்பதை ஆயுள்கால முழுதும் கவனித்து வந்தால் மேல் சொல்லிய ராசிதிதி, கிரகதிதி, கிரகபாவதிதி, கிரகநிலைபாவதிதி,பார்வை திதி, நட்சத்திரதிதி இவைகள் கரதலாமலகம் போல் ஏற்படுவதைக் கண்டறியலாம். இவை எல்லாம், பிறந்த திதியினுல் ஏற்பட்ட முக்கியமான ஜோதிட ரகசிய பலன்கள். இவைகளாலேயே ஜெனனகால வாழ்நாள் அமைப்பு உண்டாவதைக் கண்டறியலாம். ஆனுல், சிருஷ்டியின் அமைப்பில் இப்படிப் பட்ட சூன்யபலனைச் சாதாரணமாகக் கொடுப்பதுபோலவே, திதி, லக்கினம், கிரகநிலை, அமைப்பினுல் இப்படிப்பட்ட கொடிய சூன்ய கிரகங்கள் வெகுவிதமான ராஜ யோகத்தையும் உண்டுபண்ணுகின்றன. க்ஷீணச்சந்திரன் கதியில் கூட அரசன் உதித்தலும் திதியின் விசேஷமே.

## திதி கிரகங்கள் ராஜயோகம்.

இப்படி வெகுவாய்க் கொடியதான சூன்யபலனைக்கொடுக்கக்கூடிய கர்த்தாக்களாகிய சூன்யகிரகங்கள்,கெடுதல்பலனைக் கொடுப்பதென்முல், எவ்வாறு அவையே வெகுராஜயோகத்

னை தத்தரும் என்று ஒப்புக் கொள்ளக்கூடும்? இப்படிப்பட்ட ஆக்ஷேபனை இருக்கக்கூடும்: ஆனால் லக்னவஸாத், கிரகநிலை வஸாத், சந்திரவஸாத், நட்சத்திரவஸாத், லோகத்தில் பொதுவாக சாதாரண ஜெனனமும், சாதாரண மிஸ்ரபலனையும், அதாவது நன்மைதீமை இவைகள் ஒருவாறுகுறைந்த அளவில் கலந்த ஜெனனமும், கோடிகோடியாக அமையும் காலத்திலும், அதே கிரகநிலையில் யாதாமொரு காலத்தில் அதிர்ஷ்ட ஓரையில் ராஜன் ஜெனனமாகிறதை நாம் காணலாம்: ஆகையால், இந்தத்தத்துவத்தை ராஜன் ஜாதகத்தை ஒன்று எடுத்துக் கொண்டும், அதே லக்கினத்தில் அல்லது அதேதினத்தில் பிறந்தசாதாரணபிரஜையின் ஜாதகத்தைப் பரிசோதித்தும் பார்க்க, திதி, லக்கினம், கிரகநிலை, சந்திரநிலை இவைகளால் ஏற்படும் வித்தியாசம் விசிதமாகும். ஆகையால், மேல்காட்டிய விஷயங்களை, நெடுநாள் வழங்கியும் பூரணமாகப் பயன்படாத சாஸ்திர அபிப்பிராயத்தோடும், தங்கள் தங்கள் புத்திக்கு எட்டியவரையில் சுய அபிப்பிராயப்படுவதைவிட, பல ஜாதகங்களைப் பரிசோதித்து அவைகளில் இருக்கப்பட்ட மூல அம்சங்கள் இன்னதென்று கண்டறிந்தபிறகு, தங்கள் ஆராய்ச்சியில் முடிவான அபிப்பிராயங்கொள்ள வேணும். இவை ஒவ்வொருவர், புத்திக்கும் யுக்திக்கும் அமைந்தவையே. அதனைக்கண்டறிவது மிகவும் அருமை. புத்தி நுட்பத்தோடு, புத்திநடு நிலைமையோடும், தத்துவ விசாரணையினாலும் ஜோதிட சாஸ்திரப் பயிற்சி வியாபகத்தினாலும் கண்டறியவேண்டிய விஷயமாகையால், அதிகநாள் தேர்ச்சியும் ஆராய்ச்சியும் அத்தியாவசியம். இப்படிப்பட்ட அதிக உன்னதமான விதிவிளக்க மார்க்கத்தைக் கைவிட்டு, (1) ஸ்தானம், (2) திக்கு, (3) சேஷ்டை, (4) காலம், (5) உச்சம், (6) நீசம், தற்காலத்தில் லக்கினவஸாத், சந்திரதிசைவஸாத்

இன்னும் சட்பலம், அஷ்டகவர்க்கம் இவை மூலமாகவும் விசிதமாகாததாயும், கணிதசாஸ்திர கோட்பாடு நிர்மானத்திற்கும் மாறுபாடாகவும் நடக்கும் பலன்களை நாம் நம் அநுபோகத்தில் காண்கிறோம்.

மேல் சொல்லியபடி, சூன்யபலன் திதியினால் அடைந்த கிரகங்கள் எப்போது ஜெனனகால யோகத்தையோ, அல்லது கோசாரத்தில் அவயோகத்தையோ கொடுக்குமென்று ஆராய்ச்சிசெய்தகாலத்தில், அவைகள் ஜெனனகாலத்திய ஜென்மா அமைப்புநிலையைஉண்டாக்கினதற்குக் காரணகர்த்தாக்களாக இருந்தபோதிலும், கீழ் காட்டிய விதிப்படி பலனை ஜீவ்யகாலத்தில் கொடுக்கின்றன.

குறிப்பு: 6-ம் பாவமும், 3-ம் பாவமும் இவைகளுக்குச் சிரேஷ்டமான பாவங்கள். ஆனால் இந்தப்பாவத்தில் சூன்யர் தனிமையாய் நின்றால் தத்பாவம் சூன்யம்.

ஜெனனகாலத்தில் சூன்யர் நின்றபலன்கள்.

(1) ஒரு ஜாதகத்தில் சூன்ய கிரகங்கள், பாபர் சம்பந்தமாவது, அல்லது பாபர்வீட்டிலாவது, கெட்டபாவங்களிலாவது அமைந்தால், நல்ல பலனைக் கொடுப்பார்கள்: அதாவது ஜாதகத்திற்குத்தக்கவாறு(விரலுக்குத்தகுந்த வீக்கம்போல்) நல்லயோகம், விவாகம், திருப்தியான பலன லாபம் இஷ்டபிராப்தி இவைகளைக் கொடுப்பர்.

குறிப்பு: பாபர்வீடாவது, (அதாவது)பாபராசியாவது என்னவெனில்-மேஷம்,விருச்சிகம், சிம்மம், மகரம்,கும்பம்: பாபர் சம்பந்தமாவது,—பாபக்கிரகங்களாகிய சனி - செ - சூ-ரா-கே - இவைகள் ஒன்றுடனாவது இரண்டு மூன்றுடனாவது சேருவது. கெட்டபாவங்கள் 6-8-12-3.

(2) ஒரு ஜாதகத்தில் சூன்ய கிரகங்கள் ஜெனனகாலத்தில் அஸ்தங்ககதி அல்லது வக்ரகேதி அடையாமல் சுபர்வீட்டில் அல்லது ராசியில் அமைந்தாலும், சுபருடன் சம்பந்தப்பட்டாலும், நல்லபாவத்தில் அமைந்தாலும், அவயோகத்தையே கொடுப்பார்கள்: அதாவது. பாலாரிஷ்டம், பலவிதநஷ்டம், தரித்திரம், அங்கபின்னம், வியாதி, பகை, விரயம், இப்படிப்பட்ட துர்ப்பலனைக் கொடுப்பார்கள்.

குறிப்பு:—சுபர்வீடு அல்லது ராசி-ரிஷபம்,மிதுனம், கடகம், கன்னி, துலாம், தனுசு, மீனம். சுபக்கிரகமாவது-விருத்திசந், பு, கு, சு, இவைகள். நல்லபாவம் 1-2-4-5-7-9-10-11.

அவைகளால் கோசாரத்தில் ஏற்படும் பலன்கள்.

(3) சூன்யகிரகங்கள் கோசாரத்தில் பொதுவான பாபராசியிலும், ஜாதகத்தில் அமைந்த பாபக்கிரக வீட்டிலும் சஞ்சரிக்கும்போதும், அப்படிப்பட்ட பாப கிரகங்களுடன் கோசாரத்தில் சம்பந்தப்படும்போதும்,அவ்வாறு நின்று "வக்ரகதி" யடையும்போதும், அனேகமாக ஜென்மா அமைப்புக்குத் தக்கவாறு ஒருவாறு நல்லபலனைக் கொடுப்பார்கள்.

(4) இப்படியே, சுபர் வீட்டில் அல்லது ராசியில் சஞ்சரிக்கும் காலங்களிலும், சுபர் நின்ற வீட்டில் சஞ்சரிக்கும் காலத்திலும், சுபருடன் சம்பந்தப்படும் காலத்திலும் கெட்ட பலனே கொடுப்பார்கள்.

## கிரக வக்ரம்

பிருஹத் ஜாதகம் எழுதிய வராஹமிஹிரர் இரண்டாவது அத்தியாயத்தில்-20-வது ஸ்லோகத்தில் சூரியன். சந்திரன் இரண்டு கிரகங்கள் தவிர, மற்ற கிரகங்களாகிய-செ.

பு.கு. சு. சனி-இவர்கள்“வக்ரகதி”யடையும் போது அவைக ளுக்குச்சேஷ்டாபலம் உண்டாகிறதென்று சொல்லியிருக் கிறார். மறுபடியும் ஆயுர்தாய அத்தியாயத்தில் (அதாவது7-) 11-வது ஸ்லோகத்தில் “வக்ரகதி” யடைந்த கிரகம் அல்லது உச்சக்கிரகம் அந்தக்கிரகத்திற்குச் சொல்லப்பட்ட ஆயுர்தா யத்தை மூன்று பங்கு அதிகப்படுத்துகிறார் என்று சொல்லி யிருக்கிறார்.

ஆனால், ஆராய்ச்சியில் ஏற்பட்டவரையில், சுபராயினும் பாபராயினும் திதியினால் சூன்யத்தை அடைந்தால் அவர்கள் திசை, புக்தி, அந்தரம் நடக்கும்போது அஸ்தங்ககதி அல்லது வக்ரகதியில்தான் சுபங்களையும் தங்கள் பாவ பலனையும் கொடுக்கிறார்கள். ஜாதகத்திலும் வக்ரகெதி அடைய நல்லபலன் மற்றபடி கோசாரத்தில் சஞ்சரிக்கும் காலத்தில், அனேக விதமான கெட்டபலனைக்கொடுப்பது மன்றிக் காரியக்கேடும் செய்கிறார்கள். சூன்யபலனையும் கொடுக்கிறார்கள். சூன்யத்வம் ஏற்படாத மற்றய கிரகங்கள் அஸ்தங்ககதி அல்லது வக்ரகதியில் கெட்டபலனையே அனேகமாக கொடுக்கிறார்கள். “சூன்ய கிரகதிசை எந்த ஜாதகருக்கும் நடவாமல் இருப்பதே க்ஷேமம்.” நடந் தால் சாதாரணமாக அவயோகமே நடக்கும். வக்ரகதியினால் ஒரு கிரகத்திற்கு உண்டாகும் பலன் சூட்சமமாக இவ் விடத்தில் சொல்லியிருக்கிறது.

வராஹமிஹிரர் கிரகங்களை (1) மண்டலகிரகங்கள் என் றும் (2)தாரா. அல்லது நட்சத்திரகிரகங்கள்என்றும்பிரித்து, (1) சூ-சந்-இவர்கள் இருவரும் மண்டலகிரகங்கள் என்றும் மற்றய செ. பு. கு. சு. சனி இவைகள் நட்சத்திர கிரகங்கள் என்றும் சொல்லியிருக்கிறார்.பின்சொல்லிய ஐந்து கிரகங்களு க்கு வக்காரகெதிஅல்லது சந்திர சமாகமம் உண்டாகும்காலத்

தில் ஆயுர்பாவம் விருத்தி என்றும் அபிப்பிராயப்படுகிறார். ஆனால், ஆராய்ச்சியில் ஏற்பட்டது என்னவெனில், கிரகங்கள் அதாவது அவர்சொல்லிய தாராகிரகங்கள் திதியினால் சூன்ய சுபாவத்தை அடைந்து "வக்ரகதி அடைந்தாலொழிய" அவை ஜெனனகாலத்திலோ, அல்லது கோசாரத்திலோ, நல்லபலனைக் கொடார். ஆனால் கெட்டபலனாகிய தரித்ரம், மரணம், இன்னும்பலவித வாழ்நாள் கெடுதிகள்செய்கிறார்கள். இது விஷயமாக மேல்பாராவில் சொல்லிய நான்கு விதிகளையும் நன்றாய்க் கவனித்துப் பலனை யூகிக்கவேண்டியது. இப்படியே ஆயுள் தாயத்திற்கு அனுசரிக்கவேண்டியது: இவ்விதிகள் திதியின் ஜெனனகால விசேஷத்தால் மானிடருக்கு ஏற்பட்ட தெளிவானவைகள். ஆகவே, பொதுவாக எக்காலத்திலும் எல்லாருக்கும் சூன்ய கிரகங்கள் ஜெனன ஜாதகத்திலோ, அல்லது திசைபுத்திகாலத்திலோ, வக்ரகதியில் நல்ல பலனையும், தங்கள் சுபாவ சரகதியில் அசுப பலனையும் கொடுப்பது மேற்சொல்லிய கிரகங்களுக்கு இயல்பு என்று ஏற்படுகிறது. அந்தந்த ஜாதக அமைப்பிலும், ராசியிலும், கிரகங்கள் நின்ற நட்சத்திரத்திலும் நிச்சயமான பலன் ஏற்படும்.

பிரதமை திதியின் சம்பந்தமாக எவ்வாறு ராசி ஆட்சிக் கிரகங்களான 'சு' 'சனி' இவைகளை முக்கியமாகப் பற்றி பலாபலன்களை யூகிக்கின்றோமோ, அதுபோலவே, மற்ற திதிகளுக்குச் சொல்லிய ராசிகளையும், ராசிபாவங்களையும், ராசி ஆட்சிக் கிரகங்களையும் கொண்டு பலன் யூகிக்கவேண்டியது. அமாவாசை பௌர்ணமியில் ஜெனித்தவர்களுக்குச் சுபர் சுப பலனும் அசுபர் அசுப பலனும் கொடுப்பார்.

ஆனால் ராகு - கேது இந்த இரண்டு கிரகங்களும் திதி சூன்யராசியில் அமைந்தால், பாவம் நல்லதாயும் லக்னத்

திற்கு ராசி வேதையில்லாமல் இருந்தால்,நல்ல யோகத்தைக் கொடுத்தும், இப்படிக்கில்லா விட்டால் பலவித கொடிய பலனையேதருவார்கள். ராகுவானவர் சூன்யராசியில் அமைந்து, அந்த ராசி லக்னத்திற்கு வேதையாகில், ஜாதகனுக்கு வயது ஆக ஆக அந்தஸ்தும், சம்பத்தும், சுற்றூர், உற்றூர் இவர்களுக்குக் கெடுதியும், இன்னும் பலவிதமான பாவபலனும் ஜாதக பலனும் நாளுக்கு நாள் குறைந்து கொண்டேவரும். இதுவே வெகு தரித்திர யோகத்திற்குக் காரணம்-அதல்லாமல், ஜாதகனுக்கு ராகுதிசையே நடக்க வேண்டுமென்ற அவசியமும் இல்லை. எந்தத் திசைநடந்த போதிலும், க்ஷீண பலனையே நாளுக்குநாள் விருத்திசெய்வது அதின் சுபாவம். இதை அனேகமாய் ஆராய்ச்சியில் ஜோதிட சாஸ்திரம் தெரிந்தவர்கள் பரிசோதித்துக் கண்டறியலாம். கேது கிரகமானது இந்த நிலைமையில் நின்றால் இப்படிப்பட்ட பலன் சொல்லுவதற் கிடமுண்டாகாது. ஆனால், லக்ன ராசிக்கு வேதை ராசியில் கேது சூன்யராசியில் அமர்ந்தால் அனேகமாகத் தத்பாவம் விருத்தியாகும். இப்பலன் ஜாதகனுக்கு வயதுஆகஆகத் தான் விசிதமாகும். இப்படிப்பட்ட ஜாதகன் யோகத்தில்பிறப்பதரிது.இதுவுமன்றி மேல்சொல்லிய'ராகு', 'கேது' இவ்விரண்டு கிரகங்களும், மேல்சொல்லிய நிலையில் "தனிமையாய்" நின்றால் தான் அப்படிப்பட்ட பலன் நடந்தேறும். கிரகங்களுடன் சம்பந்தப்பட்டு அந்நிலையில் நின்றால்,சில மாறுபாடான சிறப்புப் பலன்கள்காட்டும்.இதை ஜாதகம் உணர்ந்தோர் கண்டறிய வேண்டும். இவ்விரண்டு சாயாகிரகங்களோடு சேர்ந்த கிரகங்கள் பாவம், சுபாசுபம் போல்பலனை யூகிக்கவேண்டியது.

இராசிவேதையின் விபரம் கீழேகாட்டியுள்ளதைக் கவனிக்கவும்: பொதுவாக ஒவ்வொரு ராசிக்கும் அதற்கு ஏழாம் ராசி வேதை: இதன்றி,

(1) மேஷத்திற்கு-"வேதை"-சிம்மம், கும்பம். (2) ரிஷபத்திற்கு-சிம்மம் மகரம். (3) மிதுனத்திற்கு-சிம்மம். (4) கடகத்திற்கு-கன்னி, விருச்சிகம், ரிஷபம். (5) சிங்கத்திற்கு-துலாம், மேஷம், மிதுனம். (6) கன்னிக்கு - விருச்சிகம், கடகம். (7) துலாத்திற்கு-கும்பம், சிங்கம், (8) விருச்சிகத்திற்கு-மகரம், கடகம். (9) தனுசுக்கு - விருச்சிகம். (10) மகரத்திற்கு-ரிஷபம், கடகம், விருச்சிகம். (11) கும்பத்திற்கு - சிம்மம், துலாம். (12) மீனத்திற்கு - கும்பம்.

நட்சத்திர அத்தியாயத்தில், கடைசியில் சொல்லியபடி செவ்வாய் உத்திரத்தில் நிற்கும்போது அதற்கு உத்திரத்திற்குறிய சூரியன் சாயல் உண்டென்று சொன்னோம்; அவ்வாறே, திதியினால் ஏற்படும் சூன்ய கிரஙகளின் சாயல் ஜாதகத்தில் கிரகங்களுக்குஅமைந்தால் சூன்யபலனே சொல்லவேண்டியது; அதாவது செவ்வாய் உத்திரத்தில் நின்று, ஜாதகன் தசமியில் பிறந்து, செவ்வாய் திசை நடந்தால் செவ்வாய்க்கு சூரிய சாயல் உண்டாவதால் செவ்வாய் திசையில் கெட்டபலனே நடக்கும். (தசமிக்கு சூ, செ, சூன்ய கிரகம்) ஆனால் பாவத்தில் நின்ற விதமாக நடக்கும். லக்னவஸாத் அப்படிப்பட்ட செவ்வாய், லக்னத்திற்கு யோகாதியாக இருந்தபோதிலும் கூட, இப்பலனே சிறந்து நடக்கும். இதுபலநாள் ஆராய்ச்சியில் ஏற்பட்ட ஒரு தத்வம். இதைஅநுஷ்டானத்தில் கண்டறியலாம். இது உண்மையான கிரகதத்வமாகையால், இப்படிப்பட்ட திசையில் அனேகமான வேதைபலனும், முடிவாக மாத பலனும் நடந்தேவரும். இந்தப்பலன் எப்போது நடக்குமென்று கண்டறியலாம். இச்சிறுபுத்தகத்தில், அதின் விசிதம் அசாத்யமாகையால் குறிப்பாகக் கிரகதத்வத்தை மாத்திரம் விளக்கினேன். சிறுநூல்களில் சொல்லியபடி, சோதிட அரிச்சுவடியை அல்லது வருஷாதி நூல் நன்றாகத் தெரிந்தவர்கள், இப்பெரிய சாஸ்தி

ரத்தைச் சுலபமாக அறியவேண்டும் என்ற கருத்துடனே, இப்புத்தகம் எழுதப்பட்டது. வெகு ஆச்சரியமான வான சாஸ்திர கணிதத்தை எல்லோரும் கற்றறிவது அசாத்யமாகையால், அவ்வாறு கணிதசாஸ்திரம் தெரிந்துக்கொள்ள சக்தியற்றவர்களோ, அல்லது தொழில் முறையில் சாவகாசமில்லாதவர்களோ, இச்சோதிட பல தீபிகையைக் கொண்டு ஜோதிட சாஸ்திரத்தை எளிதில் தெரிந்துக் கொள்ளலாம். வாசிக்கும்போது இது அதிக சுலபமாகவும் சாதாரணமாகவும் தோன்றிய போதிலும், அனேகர் ஆராய்ச்சியில் இதின் உண்மையும்தத்வம் எல்லாருக்கும் விசிதமாகும். இதை ஒவ்வொருவரும் தங்கள் தங்கள் சுய ஆராய்ச்சியில் கண்டறிய வேண்டியது.

## திதி உதயராசி.

விதிவிளக்க முறைக்கு இன்றியமையாதது இன்னொரு விஷயம் உண்டு. அதாவது ஒருவன் ஜெனித்த திதி அன்றைய தினம் உதயமாகும்ராசியும் அஸ்தமிக்கும் ராசியும் அதாவது ஜெனனகாலத் திதி நாழிகை எந்தராசியில் ஆரம்பிக்கிறதென்றும் எந்தராசியில் முடிவாகிறதென்று கணக்கிடில் (ஆனந்தபோதினி பஞ்சாங்கத்தைப் பார்க்கவும் பஞ்சாங்கங்களில் சிலவற்றில் திதி நாழிகையைக்காட்டி அதனுடன் வியாபகமாகும் மணியையும் காட்டியிருப்பதால்) சாதாரண முறையில் லக்கினம் பார்ப்பதுபோல் இந்தத் திதி உதயம் ராசியைக் காணலாம். இதனால்ஜாதகனுக்குஇருக்கும்படியான பிராரத்வ யோகாவயோக பலன் தெளிவாக ஏற்பட்டுவிடும். ஜாதகன் ஜெனித்த லக்னத்திற்கும் இதற்கும் சம்பந்தமில்லாதபோதிலும், அதாவது ஜெனித்த லக்னம் ஒன்றாகவும், திதிஉதயலக்னம் ஒன்றாகவும் இருந்தபோதிலும், விதிவிளக்க முறைக்கு இது அவசியம். இதை ஒரு உதாரணத்தால்

தெளிவாக விளக்கலாம். ஒரு ஸ்திரீ கன்னியாலக்னத்தில் ஜெனனமானல், ஜனனதிதி சதுர்த்தசி (14) ஆகில், அந்தச் சதுர்த்தசி திதி அன்றையதினம் துலாத்தில் உதயமாகில், இந்தஸ்திரீக்கு வெகு சீக்கிரத்தில் சுபபலன் நடந்துகுடும்பம் உண்டாகிவிடும். ஏனெனில், சுக்கிரன் தனகுடும்பபாக்கியாதியாகையாலும், கன்னியாலக்னத்திற்கு சுப னைகையாலும், இந்தப்பலன் கொடுக்கும். ஆனல் 'குரு' ஆறில்நின்றல், சுக்கிரனுக்கும் குருவுக்கும் ஏற்பட்டிருக்கும் (யோக அதிகாரத்தைப் பார்க்கவும்) "யோக" சம்பந்தத்தினலும், சுக்கிரனுக்குத் திதி உதயபாவம் அமைந்ததினலும், குரு திதியினல் சூன்யபாவத்தை உடையவராதலாலும், வயது ஆக ஆக வியாதி மேம்படும்: ஆனல், எப்படிப்பட்ட வியாதி என்று கண்டறிய வேண்டுமானல், பிறந்த தினம், குருநின்ற ராசி பலன் போல் வியாதி ராசி அங்கத்தில் உண்டாகும். லக்னவஸாத் எந்தத் திதியாகிலும் (3-வது) திரிதிய பாவத்தில் அல்லது ராசியில் "உதயமானல்", நாளுக்குநாள் ஜாதகனுக்கு க்ஷயபாவம், அதாவது க்ஷீணபாவத்தையே விருத்தி செய்து அவயோகத்தைக் கொடுக்கும். இந்தப்பாவாதி சுபராகி சூன்யராசியில் ஜாதகத்தில் நின்றல், தரித்திரயோகமாம்.



# 7-ம் அத்தியாயம்

## சூரிய சந்திர விதி விளக்கமுறை

### யோகம்

நம்மிந்துக்கள், உபயோகித்துவரும் பஞ்சாங்கத்தில் "யோகம்" என்பது நாளுக்குநாள் சம்பவிக்கும் சாந்திரமான சௌரமான யோகத்தைக் காட்டியதுமன்றி, அது எவ்வளவு காலம் பிரதிதினம் வியாபகமாகும் என்று நாழிகைமூல மாகத் தெரிவித்திருக்கிறார்கள். அப்படிப்பட்ட பஞ்சாங்கத்தில் நமக்கு உபயோகமாகும் பொருட்டு ஐந்து அங்கங்களாகிய வாரம் (1), திதி (2), நட்சத்திரம் (3), யோகம் (4), கரணம் (5), என்பனவற்றுள் இது நான்காவது பஞ்சாங்கஉட்பிரிவு. பஞ்சாங்க கணிதர்களுக்கு மாத்திரமே இதின் கணிதம் தெரியும். மற்றய கிரகஸ்தர்களுக்கு அனேகமாகத்தெரியாது. ஆனால் நமக்கு நித்ய முகூர்த்த அனுஷ்டானத்திற்கும், சகல காரிய ஆரம்பத்திற்கும், தொழில் முறைக்கும், மற்றும் அனேகவிதமான நித்ய காரியவிருத்திக்கும், அமிர்தாதியோகம் என்று சொல்லப்பட்ட (1) அமிர்தயோகம், (2) சித்தயோகம், (3) மரணயோகம், (4) பிரபலானிஷ்டயோகம் இவையே அனுஷ்டானத்தில் அங்கீகரிக்கப்பட்டு வருகின்றன. ஆனால் யோகத்தின் கணித தத்வம், விதிவிளக்கத்திற்கு, அதாவது ஜோதிடர் அனேகருக்கு, உபயோகமாவதாக எனக்குத் தெரியவில்லை. ஆகையால், இப்படிப்பட்ட "யோகம்", விதிவிளக்கத்திற்கு எவ்வாறு உபயோகமாகின்றது என்பதைத் தெரிவிக்கின்றேன்.

இதை வாசிப்போரும், இனி யோக கணிதத்தைக் கொண்டு, ஜாதகபலனை ஆராய்ச்சி செய்யவேண்டியது அவசியம். இவ்வாறு ஆராயச்சியில் ஏற்படும் பலன்கள் விசிதமாகவும், சுத்தமாகவும், நம்பக்கூடியதாகவும், ஏற்படும் என்பதற்குச் சந்தேகமில்லை.

'யோகம்' என்பது ஒரு சம்ஸ்கிருத வார்த்தை. இதன் பொருள் 'சந்தி' அல்லது 'பயன்' என்று சொல்வது. இதில் யோகம் என்றால் "ஜன்மபயன்" என்றே கொள்ளவேண்டியது. திதியானது மேற்சொல்லியபடி, சூரியனுக்கும் சந்திரனுக்கும் யாதாரொருகாலத்தில் இருக்கப்பட்ட தூரத்தைக் காட்டுவது என்று தெரிவித்திருந்தோம். அதுபோலவே, அமாவாசை தொடங்கி சூரியனும் சந்திரனும் சேர்ந்து ராசி மண்டலமாகிய 360 - பாகை கொண்ட ராசிச் சக்கரத்தில் சஞ்சரிக்கும் இயல்பைக்குறிப்பதற்காக, யோகமண்டலத்தைக் கிராந்திமண்டலம் எனப் பெயரிட்டிருக்கிறார்கள். சூரியன் சந்திரன் இவர்கள் இருவரும் திதிக்கு, எதிர்மார்க்கமாகச் செல்வதாக வைத்துக்கொண்டு, அதை யோக மாதமாக்கி, நம்முன்னோர்கள் விதிப்படி இம்மாதத்தை (தினத்திற்கு அறுபதுநாழி என்று கணக்கிட்டதுபோல்) யோக மாதம் 25-நாள் 25 - நாழிகையையும், 27 - யோகங்களாகப் பிரித்திருக்கிறார்கள். தினவியாபகம் ஒவ்வொரு யோகத்திற்கும் இவ்வளவு என்று ஒருவாறு பஞ்சாங்கத்தில் நம் உபயோகித்திற்காகப் பஞ்சாங்க கணிதர்கள் காட்டியிருக்கிறார்கள். யோகத்தின் தன்மையை ஒருவாறு கணிதசாஸ்திரம் தெரியாதவர்கள் சுலபமாக இன்னதென்று தெரிந்துக்கொள்ளுமாறு மேல்குறிப்பாகக் காட்டப்பட்டது. இதின் விஷயம் அதிகமாகத்தெரிந்துக்கொள்ள விரும்புவோர், பஞ்சாங்க கணித சாஸ்திரிகளை அடுத்துத்தெரிந்துக்கொள்ளவேண்டியது. மேற்

சொல்லியதிலிருந்து திதியைப்போல், யோகமும் விதிவிளக் கத்திற்கு உபயோகமாகும்படியான கால அளவையில் இதுவு மொரு சிறப்பு உட்பிரிவினையாகும். இதைக் கிராந்திமண் டலமென்று சொல்லிய, அயன வீதியில் சூரியன் சந்திரன் இவர்கள் சஞ்சரிக்கும் தாராகணத்தை எண்ணிக் கணக்கிடல் வேண்டும்.

'அயனம்' என்னும் சம்ஸ்கிருதவார்த்தைக்கு 'சலனம்' அல்லது இடம்விட்டு நகர்தல் என்னும் அர்த்தமாகும். இவ் வார்த்தையிலிருந்து-நமக்குஉத்தராயணம் தக்ஷிணாயனம்என் னும் வார்த்தைகள் உபயோகத்தில் வந்திருக்கின்றன. இதின் தாற்பரியம் என்னவென்றால், சூரியன் வடக்குமுகமாகப் போவதும், பிறகு தெற்குமுகமாகப் போவதும்என்பதுதான். நம்முன்னோர்கள் பன்னிரண்டு மாதங்களடங்கிய வருஷத்தை இரண்டாகப் பிரித்து, ஒரு ஆறுமாதத்தை உத்தராயணம் என்றும், மற்றொரு ஆறுமாதத்தைத் தக்ஷிணாயனம் என்றும் சொல்லுகிறார்கள். மகரராசி பிரவேசத்திலிருந்து, அதாவது தைமாதம் முதல் உத்தராயணம் என்றும், ஆடிமாதம் முதல் தக்ஷிணாயனம் என்றும், கொள்ளவேண்டியது. இதுவுமன்றி, மகரராசியில் "திருவோணமாகிய" தாராகணத்திலிருந்து யோகக்கணித உபயோகத்திற்குக் கணக்கிடுதலும், கடகராசி தாராகணமாகிய "பூசத்திலிருந்து" யோககணித உபயோகத் திற்குக் கணக்கிடுதலும் முறை. ஏனெனில், மகரராசி யும் கடகராசியும் கிராந்திமண்டல சந்திகளாகக் கொண்டு இருக்கின்றனர். மேற்சொல்லியதாராகணத்திலிருந்தே யோக கணிதஞ்செய்தால் ஒருவாறுதற்காலயோகம்ஏற்படும்: ஆனால் இது துல்லிய கணிதசாஸ்திரமுறையாகாது. ஆனபோதிலும், சற்றேறக்குறைய,சரிவர இருக்குமாகையால் இதைஒருவாறு அனுஷ்டிப்பது தகுதி. உதாரணமூலமாக இதை விசிதமாகக்

கிழேகாட்டியிருக்கின்றது-ஆங்கிரஸஹூ மாசிமீ 27௳வெள்ளிக்கிழமை திரயோதசி 10-13,மகம் 59-15, என்று ஆனந்த போதினி பஞ்சாங்கத்தில் காட்டியிருக்கின்றன. அன்றைய யோகத்தைக்கணக்கிடல்வேண்டுமென்றால்சூரியன் அன்றைய தினம் இருக்கப்பட்ட நட்சத்திரம் பூரட்டாதி 3-ம் பாதம். ஆகவே, பூசத்திலிருந்து சூரியன் நட்சத்திரத்தைக்கணக்கிட அதாவது பூசத்திலிருந்து பூரட்டாதி 18-வது ஆகும்; மறுபடியும் திருவோணத்திலிருந்து சந்திரனிருக்கும் மகம் வரையில் கணக்கிட 16 - ஆகும். இவை இரண்டையும் கூட்ட 18+16=34 ஆகும்: இதில் 27-யோகத்தைக் கழிக்க வருவது 7-வது யோகம்; அதாவது சுகர்மம் நாம யோகம். இப்படிக் கணக்கிடுவதில் யோகநாழிகை முதலியன ஏற்படா: ஆனால், சூரியன் எந்தத் தாராகணத்திலாவது நான்காம் பாதத்தில் இருக்கும்போது மறுயோகமே பஞ்சாங்கத்தில் ஏற்படும். இதுவன்றிச் சாதாரணமாக, இவ்விதியைக்கொண்டு பிறந்த கால யோகத்தை ஒருவாறு கண்டறியலாம். ஆனால், ஒவ்வொருவரும் பிறந்தகால யோகத்தைச், சரியான பஞ்சாங்கத்தைக் கொண்டே கண்டறிவது நன்மை: இதுவே சரிவர விதி விளக்கத்திற்கு உபயோகமாகும். இதின் முக்கிய விதிவிளக்கக்கருத்தும் இதில் அடங்கிய தெய்வீக விசித்திரரகசியமும் அவரவர்களுக்கு ஆராய்ச்சியில் விசிதமாகும்.

நம் முன்னோர்கள் பன்னிரண்டு ராசிக்குள் அடங்கிய தாராகணத்தை, 27-ஆக வகுத்ததுபோல், யோகத்தைக் கணக்கிட சூரிய சந்திரர்களால் உண்டாகிய கிராந்தி மண்டலத்தை 27 - யோகங்களாகப் பிரித்துள்ளார். அவைகளை 25-26-ம் பக்கங்களில் விவரித்திருக்கிறோம்.

நாம் முன்னமே யோகத்தை கண்டு பிடிக்க வேண்டுமானால் பூசத்திலிருந்து சூரியன் இருக்கும் நட்சத்திரத்தை

யும், திருவோணத்திலிருந்து சந்திரன் இருக்கும் நட்சத்திரத்தையும் கணக்கிடல்வேண்டுமென்று சொன்னோம் ஆகையால், நாம் விதி விளக்கத்திற்கு உபயோகமாகும் பொருட்டு, சூரியன் பூசத்திலிருப்பதாகவும், சந்திரன் திருவோணத்தில் இருப்பதாகவும் வைத்துக்கொண்டு ஒரு பதக்கம் செய்துக்கொண்டால், அதிலிருந்து ஒருவன் ஜனித்த யோகத்தை வெகு சுலபமாகக் கண்டுபிடிக்கலாம். அப்படிப்பட்ட பதக்கம் கீழே கொடுத்திருக்கிறதைக் கவனிக்கவும்.

| | (யோகம்) | சூ | சந் |
|---|---|---|---|
| (1) | விஷ்கம்பம் | பூசம் | —திருவோணம். |
| (2) | பிரீதி | ஆயில்யம் | —அவிட்டம் |
| (3) | ஆயுஷ்மான் | மகம் | —சதயம் |
| (4) | சவுபாக்கியம் | பூரம் | —பூராட்டாதி |
| (5) | சோபனம் | உத்திரம் | —உத்திரட்டாதி |
| (6) | அதிகண்டம் | அஸ்தம் | —ரேவதி |
| (7) | சுகர்மம் | சித்திரை | —அசுவனி |
| (8) | திருதி | சுவாதி | —பரணி |
| (9) | சூலம் | விசாகம் | —கிருத்திகை |
| (10) | கண்டம் | அனுஷம் | —ரோகிணி |
| (11) | விருத்தி | கேட்டை | —மிருகசீரிஷம் |
| (12) | துருவம் | மூலம் | —திருவாதிரை |
| (13) | வியாகாதம் | பூராடம் | —புனர்பூசம் |
| (14) | அரிஷணம் | உத்திராடம் | —பூசம் |
| (15) | வச்சிரம் | திருவோணம் | —ஆயில்யம் |
| (16) | சித்தி | அவிட்டம் | —மகம் |
| (17) | விதீபாதம் | சதயம் | —பூரம் |
| (18) | வரியான் | பூரட்டாதி | —உத்திரம் |

| | | |
|---|---|---|
| (19) பரிகம் | உத்திரட்டாதி | —அஸ்தம் |
| (20) சிவம் | ரேவதி | —சித்திரை |
| (21) சித்தம் | அசுவனி | —சுவாதி |
| (22) சாத்தியம் | பரணி | —விசாகம் |
| (23) சுபம் | கிருத்திகை | —அனுஷம் |
| (24) சுப்பிரமம் | ரோகிணி | —கேட்டை |
| (25) பிரமம் | மிருகசீரிஷம் | —மூலம் |
| (26) அயிந்திரம் | திருவாதிரை | —பூராடம் |
| (27) வைதிருதி | புனர்பூசம் | —உத்திராடம் |

இதை வாசிக்கும் சிலருக்கு, இவ்விதமாகக் கணக்கிடுவதும், இப்படிப்பட்ட பதக்கத்தைத் தயார் செய்து விதி விளக்கத்திற்கு உபயோகிப்பதும், பிரபஞ்ச உண்மை வர்த்தமானமாகிய அதிக மர்மமான விதியைக் கண்டு பிடிக்க, இது ஒரு பிரயோசன மற்ற சமத்காரமானதும், யுக்தி விசேஷமுள்ளது என்றும், விதி விளக்கத்திற்கு எவ்வாறு பயன் படுமென்றும் தோன்றலாம். ஆராய்ச்சி ஆரம்பத்தில் எல்லாவித பொது நியாயத்திற்கும் உட்பட்ட ஏற்பாட்டையும் காரியத்தையும் செய்யவேண்டிய தவசியமாகையால், இம்மாதிரியான ஒருபதக்கம் ஏற்படுத்தியதில் அதின் விஷயம் ஏற்பட்டது. மற்றவர்களுக்கும் இதே மாதிரியான ஆராய்ச்சியில், விதி விளக்கத்திற்கு இப்பதக்கம் அவசியமாக ஏற்படும்.

இப்பதக்கத்திலிருந்து யூகித்தது என்னவென்றால், நட்சத்திர அத்தியாயத்தில் சொல்லியபடி, யாதாமொரு கிரகம் அது நிற்கும் நட்சத்திரத்தின் சந்திர திசைபோல் அக்கிரகத்திற்குச் சாயல்உண்டாகின்றதென்றுசொன்னோம். அதாவது, சூரியன் புனர்வசு நட்சத்திலிருக்கும்போது அந்த சூரியனுக்குக் குரு சாயல் உண்டாகிறதென்று சொன்

ளோம். அதுபோல, இப்பதக்கத்தில் 27-யோகங்களுக்கும் உண்டாகிய நட்சத்திர இரட்டையிலிருந்து, அந்தந்த யோகம் ஜனன யோகமாக ஏற்படும்பட்சத்தில், அந்தந்த நட்சத்திர கிரக சாயல்களேயும், அதின்ராசிக் கிரகங்களேயும் கவனிக்க வேண்டியது. அப்படிக் கவனிக்கும்போது இரண்டு கிரகங்கள் ஒன்றுக்கொன்று 'அனுபந்தம்' அல்லது 'பரிபூரக' கிரகமாக ஏற்படுகின்றன: அப்படி அமையும் கிரகங்கள் பல பாவத்தில் விதி விளக்கத்திற்கு இன்றியமையாதனவாகின்றன. அப்படி அனுபந்தம் அல்லது பரிபூரக கிரகங்கள் கீழே காட்டியுள்ளன.

யோகதாரை பதக்கம்பார்க்க.

| | | |
|---|---|---|
| (1) சனி —சந் | (4) சு —கு | (7) செ —கே |
| (2) பு —செ | (5) சூ —சனி | (8) ரா —சு |
| (3) கே —ரா | (6) சந்—பு | (9) கு —சூ |

இவைகளே மாறி மாறி 27-யோகங்களுக்கும் வரும்.

அனேக காலமாக ஆராய்ச்சிசெய்ததில், யோகத்தினல் ஏற்படும் இரு நட்சத்திரங்களேயும், அவரவர்களுக்கு 'யோக தாரை' என்று வைத்துக்கொண்டு, ஜாதக பலனைக் கவனித்திடல் வேண்டும்: அப்படி கவனிக்கும் போது, அதிகவிமரிசையானவும், நம்பக்கூடியனவானதுமான பலன்கள் ஏற்படுகின்றன. இதுவுமன்றி அனேக புத்திமான்கள் ஆராய்ச்சியில் இதை ஆமோதிப்பார்கள் என்பதற்கு ஐயமில்லை.

ஒரு ஜாதகத்தில்எந்தத் திசைநடந்தபோதிலும், அதில் மேல்காட்டிய யோக அனுபந்த கிரகதிசை புத்தியில் அனேகமாய் ஒரு பலனைக் காணலாம்; ஆனல், இப்படிப்பட்ட பலன் விசேஷபலனுயிருக்குமே யொழிய, சாதாரணமானதா யிருக்காது. இது ஒவ்வொருவருடைய ஜெனன அமைப்புக்குத்

தக்கவாறு ஏற்படும். அல்லாமலும், ஒரு கிரகதிசை நடக்கும் போது, யோகதாரகைகள் (அனுபந்தகிரகம்)எந்தப்பாவத்தில் அமைந்திருக்கிறதோ, அதுபோல் பலன் நடக்கும்.

இதன்றியும், யோகதாரகை என்று சொல்லப்பட்டுப் பிரதி யோகத்திற்கும், பதக்கத்தில் காட்டிய இரண்டு நட்சத்திரங்களில், அனேகமாக சூரியன்வஸாத் ஏற்படும் நட்சத்திரம் "விருத்தியாம்ஸத்தையும்," சந்திரன்வஸாத் ஏற்படுவது "க்ஷயம்" அல்லது "க்ஷீணம்" அல்லது "கெடுதல்" பலனைக் கொடுக்கின்றன. இப்படிப்பட்ட நட்சத்திரத்தில்,ஜாதகத்தில் சாரவகையில்கிரகங்கள் நிற்கும் பட்சத்தில், மேல் சொல்லிய பலனைக் கொடுக்கின்றன. இதுவுமன்றி, இவ்விரண்டு யோக தாரைகளும் அமர்ந்த ராசிநாதனும் (அதாவது வியாகாத யோகத்திற்கு யோக தாரகை பூராடம்—புனர்வசு, பூராடம் தனுசில்நிற்பதால்குருவும்,புனர்வசு—மிதுனகடகமாகையால் புதனும் சந்திரனும்) இதேமாதிரியான பலனைக் கொடுக்கின்றார்கள். அதாவது சூரியன்வஸாத் யோகத்தில் ஏற்பட்ட நட்சத்திர ராசிநாதன் விருத்தி, யோகம், நன்மை இவைகளையும்,சந்திரன்வஸாத்ஏற்பட்ட கிரகம் க்ஷீணம், தரித்திரம், மரணம், கெடுதல் முதலிய பலனையும் கொடுக்கின்றார்கள். இவைகளை உதாரண மூலமாக விளக்கினால் பெருகுமாகையால் குறிப்பாகக் காண்பிக்கப்பட்டன. அவரவர்கள் தங்கள் தங்கள் ஜாதகத்தில் ஏற்படும் யோகதாரகையைக் கவனிக்க மிகத்தெளிவாக ஏற்படும். இது யோகத்தினால் விதிவிளக்கத்திற்கு உண்டாகிய உதவி. இதுவுமன்றிச் சில ஜாதகத்தில் விருத்திபலன் க்ஷயபலனாகவும், க்ஷயபலன் விருத்தியாகவும் மாறிநடக்கலாம்: அப்படி நடந்தபோதிலும் யோகதாரகையின் பேருதவி இன்றியமையாதது. பலன்கள் நல்லவை அல்லது கெட்டவை என்று காண்பிக்கிறது.

பொதுவாகச் சில யோகங்கள் சம்ஸ்கிருத சாஸ்திரங்களில், கெடுதலாகக் காட்டி யிருக்கிறார்கள். அவை கீழே கண்டிருக்கின்றன.

(1) விஷ்கம்பம், (2) அதிகண்டம், (3) சூலம், (4) கண்டம், (5) வியாகாதம், (6) வஜ்ரம், (7) விபதீபாதம், (8) பரீகம், (9) வைதிருதி.

நாளதுவரையில், ஆராய்ச்சியில் ஏற்பட்ட சில பிரசித்தமான விஷயங்கள், ஆராய்ச்சிக்கு உதவியாகும் பொருட்டுக் கீழே கொடுக்கப்பட்டிருக்கின்றன: சில ஜாதகத்தில் ஜனன யோகத்தில் ஏற்பட்ட நட்சத்திர சாயல் கிரகம், அதாவது விஷ்கம்பயோகத்திற்கு இரண்டு யோகதாரைகளாகிய (பூசத்திற்குச் சனிசாயல்) பூசம்—திருவோணம், இவைகளில் சனி லக்னத்தில் நின்றால், அது திதி சூன்யகிரக மில்லாத பட்சத்தில், லக்னத்தை விருத்திசெய்து பூர்ணாயுசு உண்டுபண்ணுகிறது. ஜாதகனோ அல்லது ஜாதகியோ திடகாத்திரமுள்ளவராக அமைகிறார்கள்: திதியினால் சூன்ய கிரகமாகும் பட்சத்தில், நேர் பிரதிகூலமான பலன் கொடுக்கின்றது: இதுவுமன்றி, எப்படிலக்னபாவத்திற்குமேலே சொன்னேனோ, அதுபோலவே, பன்னிரண்டு பாவங்களுக்கும் பார்த்துக்கொள்ளவும்; இதுவுமன்றி, சந்திரவஸாத் அடைந்த நட்சத்திர சாயல் கிரகம் 8, 12, 3, இவ்விடங்களில் அல்லது இப்பாவங்களில் அமைந்தால், அனேகமாய் நல்லபலனையும் யோகத்தையும் கொடுக்கின்றது. இதுவிஷயமாக, ஆராய்ச்சி இன்னும் செய்துக்கொண்டிருப்பதினால், அதிகமாக எழுத இடங் கொடுக்கவில்லை. ஆனால், இதுவிஷயமாக ஆராய்ச்சி செய்வோர் வேண்டுகோளின் பேரில் இரண்டாம் பதிப்பு அல்லது விருத்தி பதிப்பில் வெளியாகும்.

சந்திரன் தவிர, மற்ற கிரகங்கள் நிற்கும், தாராகணம், கிரகசாரம், அல்லது நட்சத்திரத்தை, யாதாெரு ஜாதகத்திற்கு ஆதாரமாக வைத்துக்கொண்டும், சூரியன் நின்ற நட்சத்திரத்தையும் ஆதாரமாக வைத்துக்கொண்டும், (சூரியன் சந்திரன் இவர்கள் நிற்கும் நட்சத்திரத்தைக்கொண்டு எப்படி ஜனனகால யோகத்தைக் கண்டறிகின்றோமோ அதுபோலவே சந்திரன் தவிர மற்றய கிரகங்கள் நிற்கும் நட்சத்திரத்தைக்கொண்டு அந்தந்தக் கிரகங்களுக்கு "யோகம்" அமைந்ததாகக் கருதி, அவைகளையும் கணக்கிட்டு, ஒவ்வொரு கிரகத்திற்கும் சூரியன்வசாத் ஏற்படும் யோக தாரைகள் அல்லது நட்சத்திரகிரகசாயல் அதற்கு விருத்தி அம்ஸத்தைக்கொடுப்பதாகக் கொள்ள வேண்டியது. அந்தந்தக் கிரகதிசை நடக்கும்கால்யோகதாரகை சாயல் கிரக புக்தியில்பாவ பலனுண்டு.

அதாவது,விஷ்கம்ப யோகத்தில் பிறந்தவர்களுக்குச் சந்திர திசையில் சனிபுக்தி பலனைத்தரும் காலம். அவ்வாறே சனி திசையில் சந்திரபுக்தி பலன்நடக்கும் காலம். அப்படியே சூரியதிசையில் சனிபுக்தியில் பலன் நடக்கும். ஆராய்ச்சியில், ஒவ்வொருவரும் தங்கள் தங்கள் ஜாதகத்தைக் கொண்டு உறுதி செய்துக்கொள்ளவேண்டும். அப்படி அனுபோகத்தில் சரியாய் இருக்கும் பட்சத்தில் எதிர்கால பலனைக் கண்டறிய இதுமுக்கியமான ஒருகணித தத்வம்ஆகும்: இவ்வாறுபலனை யூகிக்குங் கால் கோசாரத்தில், ராகு, கேது நிற்கும்நிலைமையை மாத்திரம் கவனித்துப் பலனையூகிக்க வேண்டியது: இப்படி ராகு, கேதுக்களைக் கவனிக்கவேண்டியது,விதிவிளக்கத்திற்கு முக்கியமானதும் இன்றியமையாததுமான ஒரு பொதுவிதி. இதைக் கவனியாமற்போனல் மற்ற கணிதப்படியும் கோசாரப்படியும், தற்கால திசைபுத்திவஸாத்தும் ஏற்படும் பலன்கள் தவிறிவிடும் என்பதற்குச் சந்தேகமேஇல்லை. விதி

விளக்கத்தில் ஏற்பட்ட இது ஒரு முக்கியமான தத்துவம். ராகு, கேது இவர்களையும், இவர்கள்நிற்கும் நட்சத்திரத்தை யும், பாவத்தையும் பொதுவாகக் கவனித்த பிறகுதான் மற்ற விஷயங்களின் பலாபலன்கள் ஏற்படும். இதை விட்டுவிட் டால் பல பாவம் எவ்விதத்திலும் சரிவராது.

அப்படிக் கணக்கிட, சந்திரன் தவிர மற்றைய கிரகங்க ளுக்குத் தாங்கள் நிற்கும்நட்சத்திர யோகதாரையில் ஏற்படும் சாயல் கிரகம், அந்தக் கிரக திசைபுக்தியில், நல்ல பலனையே கொடுக்கின்றது. ஆகையால், சூரியன் முதல் மற்ற எட்டு கிரகங்களுக்கும் யோகதாரகை சூரியன்வஸாத்எது அமைகிற தென்று கண்டறிந்து வைத்துக்கொண்டால், அனேக விதத் தில் பலனை யூகிக்கச் சுலபமாக இருக்கும். விஷ்கம்பத்தில் பிறந்தவர்களுக்கு எப்படி சந்திரனும் சனியும் யோகதாரகை யாக அமைந்தாரோ, அதுபோல மற்றகிரகங்களுக்கும், தாம் நின்ற நட்சத்திரம், சூரியன் நின்ற நட்சத்திரம், இவைகளைக் கொண்டு கண்டறிந்த யோகதாரகை சாயல் கிரகம் அக் கிரகத்தின் திசையில் "யோகம்" அல்லது "ஜென்மபயன்" கொடுக்கும்.

## 8 - ம் அத்தியாயம்

### சூரிய சந்திர விதி விளக்கமுறை

### ராகு, கேதுக்கள்.

குழந்தை பருவத்திலிருந்து முதல் முதல், தாய் மூலமாக நாம் எல்லோரும் சந்திரனைப் பார்த்து மகிழ்ந்திருக்கிறோம். அப்படி நமக்குத் தெரிந்த சந்திரனைப் பற்றியும், அதின் ஜோதிட உதவியைப்பற்றியும், நாம் அறியவேண்டிய தவசியம்: அதற்கு உண்டாகும் வளர்பிறை தேய்பிறை இவைகளைப்பற்றி, நாம் எல்லோரும் தெரிந்துக்கொள்ள வேண்டியது: சந்திரனுக்கு உண்டாகும் தேய்பிறை வளர் பிறையினால், அது பூமியை ஒரு மாதத்திற்கு ஒருமுறைசுற்றி வருகிறதென்று ஏற்படுகிறது. அதுவுமன்றி, நம் பார்வைக்கு ஒரு தட்டுபோல் காணப்பட்டாலும், உண்மையாகவே அது ஒரு உருண்டை வடிவுள்ளது. ஒரு சிறிய தூரதிருஷ்டிக்கண்ணுடியால்இதைப் பார்க்கும்பட்சத்தில், சந்திரன் உருண்டை வடிவம் என்று நன்றாய்த் தெரியும். கணித சாஸ்திரிகள் சந்திரன் பூமியினின்று சுமார் 240,000 - மைல் தூரத்தில் இருக்கின்றதென்று சொல்லுகிறார்கள். பூமிஎப்படிசூரியனைச் சுற்றிவருகின்றதோ, அதுபோல் சந்திரன் பூமியுடன் சூரியனையும், பூமியையும் சுற்றிவருகிறது. பூமிக்கும் சூரியனுக்கும் இருக்கப்பட்ட நிலைமையில் அமாவாசை உண்டாகின்றது: அப்போது சந்திரன் இரண்டுக்கும், அதாவது-பூமிக்கும் சூரியனுக்கும் மத்தியில் வருகிறது: இப்படி வருவதற்கு 29-நாள் 13-மணி நேரம் ஆகிறதென்று வானசாஸ்திரிகளின்

அபிப்பிராயம். ஆனுல், சந்திரனுனது பூமியை 27 - நாள் 8-மணிநேரத்தில் ஒரு சுற்று சுற்றிவருகிறது: இவை இரண்டுக்கும் இருக்கப்பட்ட வித்தியாசத்தை ஒவ்வொருவரும் மனதில் பதிந்துக்கொள்ள வேண்டியது: இது வானசாஸ்திர தத்வம். இதுவேமாதம்மாதம்கிரகணம்வராததற்குக்காரணம்.

பூமி சூரியனைச் சுற்றிவருவதனுல் உண்டாகும் சூரியன் வீதியும், அல்லது கிராந்திமண்டலமும், சந்திரன் பூமியைச் சுற்றிவருவதினுல் உண்டாகும் சந்திரன் வீதியும் ஏறக்குறைய ஒரேமார்க்கமாக இருந்தபோதிலும், அவைஇரண்டும்ஐந்து பாகைதூரம் விலகி இருக்கின்றனவென்றும், அதினுல் ஒவ்வொரு பௌர்ணமி யன்றும் சந்திரகிரகண முண்டாகிறதில்லை என்றும் வானசாஸ்திரிகளின் அபிப்பிராயம்.

மேல் சொல்லிய சூரியன் வீதியும், சந்திரன் வீதியும் சந்திக்கும் இடங்கள் இரண்டு. அவை ஆகாசமண்டலத்தில் வடபாகத்திலும், ஆகாசமண்டலத்தில் தென்பாகத்திலும் சந்திக்கின்றன: வடசந்திப்புக்கு ராகு என்றும், தென்சந்திப்புக்குக் கேது என்றும், நம்மவர்கள் பெயரிட்டிருக்கிறுர்கள். இதில்இருக்கப்பட்ட விசேஷமென்னவென்ருல், சந்திரன்வடசந்திப்புக்குப்பிறகுஅருக்கன்வீதிக்குத்தென்பாகத்திலிருந்து வடபாகத்திற்குச்செல்லுகிறுன்; அதுபோலவே, தென்சந்திப்புக்குப் பிறகு அருக்கன் வீதிக்கு வடபாகத்திலிருந்து தென்பாகத்தில்செல்லுகிறுன். ஆகையினுல், நம்முன்னேர்கள்சந்திரனுக்குக் கிரணவலிவு அடையும்படியான வடசந்திப்புக்கு முக்கியமாக விருத்திமார்க்க மென்றும், தென்சந்திப்புக்கு க்ஷீணமார்க்கமென்றும் சொல்லுவதுண்டு. இதுகாரணமாகப் பலபாவத்தை அனுசரித்துச் சோதிடநூல்களில், மேஷம், ரிஷபம், கடகம், மகரம், இவ்விராசிகளில் ராகு இருக்கும் போதும், அவன் திசை நடக்கும்போதும் விசேஷபலனைத்

தருகிறான் என்று அபிப்பிராயப்படுகிறார்கள். இது ஒரு பொது விதி. திதி யோகம் நட்சத்திரம் இவைகளால் இவ்விதி மாறுபாடடைகிறது. ஆராய்ச்சியில் ஏற்பட்ட தென்னவென்றால், கேதுவுக்கு வலிவுகொடுக்கும் ராசிகள், கன்னி, துலாம், விருச்சிகம், தனுசு, மகரம். இதுவுமன்றி, ராகு நின்ற நான்காம் ராசியில் (பின்புறமாகச்) சந்திரன் நிற்கும் போது சந்திரனுக்கு அதிகவலிவு உண்டு. ஏனெனில், அந்த நிலையில் சந்திரன், சூரியவீதிக்குவடக்கிலும், பூமிக்குக் கொஞ்சம் அருகாமையிலும் இருக்கிறது. இதன்றியும், இந்த இரண்டு சந்திப்புஸ்தானங்களில், பூமி சந்திரன் இவை இரண்டையும் சூரியன் ஆகர்ஷணசக்தியினால் இயக்குகிறான்; யாதாமொரு காலத்தில், கிரகங்கள் ராகுவுக்கும கேதுவுக்கும் மத்திய ராசியிலிருந்து, ராகு நிற்கும் ராசி மார்க்கத்தை நோக்கி செல்லும் காலத்தில் கிரகங்களுக்கு அதிக வலிவு உண்டு. அதாவது மகர கடகத்தில் இருக்கும் போது, துலாத்தில் இருந்து செல்லும் கிரகத்திற்கு வலிவு அதிகம். இதுவன்றி, 18-மாதத்திற்கு ஒருவிசை ஒருராசியை விட்டு மற்றொரு ராசிக்கு நவக்கிரக சரகதிக்கு எதிர்பக்கமாக ராகு, கேதுக்கள் மாறுகின்றன. இவ்வாறு மாறிநடக்கும் சந்திப்புஸ்தானங்களினின்று 18 - வருஷம் 7 - மாதத்திற்கொருவிசை, ராகுகேதுக்கள் ஜனன கால ராசியை அடைகின்றன. சந்திரன் மற்ற கிரகங்களுடைய கிரணத்தை அடைந்து பூமிக்கு அருகாமையிலிருந்துகொண்டு, ஜீவகோடிகளையும், மற்ற பூலோக தாவரவஸ்துக்களையும் இயக்குவதினால், மேல் காட்டிய தத்துவத்தைத் தெளிவாக அறியவேண்டியது. அப்படி அறியுங்கால், ஜாதகத்தில் விதி விளக்கத்திற்கு-ராகுகேது-ஜனனகாலத்திலும், எதிர்காலபலன் அறியும் போதும், இருக்கப்பட்ட நிலையின் விசேஷம் ஏற்

படும். இது பற்றியே எதிர்கால பலனைக் கண்டறியும் போது ராகுகேதுக்கள் நிலையையும் கவனிக்க வேண்டிய தவசியம்.

நட்சத்திர அத்தியாயத்தில் சொல்லியபடி, ராகுசாயல் அடைந்த கிரகபாவம் விருத்தியாகும். எப்படி என்றால், சூன்ய கிரகங்களுக்கு ராகு சாயல் அமையும் பட்சத்தில் சூன்யபலன் விசேஷமாகும். ராசிகள்வஸாத் ஏற்படும் சுபக் கிரகங்கள் ராகு சாயலை அடைய ஜன்மா ஆரம்பமுதல் யோக பலன் கொடுக்கும். ராசி வஸாத் சுபக்கிரகங்களாவன்:—

| | | | |
|---|---|---|---|
| மேஷம் கு-சூ | கடகம்-செ | துலாம்-சனி-பு | மகரம் - சு |
| ரிஷபம்-சூ-சனி | சிங்கம்-செ | விருச்சிகம்-சந் | கும்பம் - சு |
| மிதுனம்-சு | கன்னி-சு | தனுசு-சூ-செ | மீனம்-செ-சந் |

இதுவுமன்றி, கேது சாயலை அடைந்த கிரகம் லக்னாதியாகில் க்ஷீணபலனையும் க்ஷீண ஜென்மாவையும் குறிக்கும். ஆனால், கன்னி, துலாம், விருச்சிகம், மகரம் இந்த ராசிகள் லக்னமாகில் கேது சாயலை அடைந்த கிரகபலனும், கேதுவுடன் சேர்ந்த கிரகபலனும் முதலில் சாதாரணமாகி, ஆயுள் ஏற ஏற விருத்தியாகும். லக்னாதிக்கு இப்படி அமையும் பட்சத்தில் மேற் சொல்லிய ராசிகளுக்கு யோக ஜெனனமே குறிக்கும்.

இப்படிப்பட்ட ராகுவானவர், சூன்ய ராசியில் தனிமையாக நின்று பாபர் சம்பந்தமும் பார்வையும் ஜனனகாலத்தில் அமைந்திருந்தாலும், அது நிற்கும் பாவம் லக்னவஸாத் நல்ல பாவமானாலும் யோகம் கொடுக்கும். ஆனால், லக்னவஸாத்ராகு வேதை ராசியில் அமர்ந்து அதுவும் சூன்யராசி ஆகில், கெட்ட பலனைக் கொடுப்பது மன்றி, ராகு திசையில் மாரகமும் செய்யும். இது விஷயமாக இன்னும் அனேகர் ஆராய்ச்சி செய்ய வேண்டியது அவசியம். இதினால், விதி விளக்கத்திற்கு அனேக முக்கிய விதிகள் ஏற்படும்.

குறிப்பு: (1) ராகு எந்தராசியிலாவது இருக்க, அதை நோக்கி ஜனனகாலத்தில் செல்லும் திசைகிரகம்,நல்லபலனைத் தரும்; ஆனால் ராகு தனிமையாய் சூன்யராசியில் இருக்கக் கூடாது. (2) ஜனனகாலத்தில் கேது அமைந்தராசியை நோக்கிச் செல்லும் கிரகதிசை, நல்லபலனை கொடாது. ஆனால் சூன்யராசியில் அமைந்தால் யோகம் கொடுக்கும்.

நம் ஜோதிட சாஸ்திரத்தில், ராகு - கேதுக்கள் நின்ற பாவத்தில்,அவைகள் உண்டாக்கும் பலன்களைப்பாவம்வஸாத் கீழே காட்டியுள்ளது. இவைகளை மேல் சொல்லிய திதி யோகம் இவைகளின் பலத்தால் ஏற்படும் பலன்களைக் கண்டறிந்தால், சில முக்கியமான எதிர்கால பலன்கள் தெளிவாக ஏற்படும். இது சோதிட நூலிலிருந்து எடுக்கப்பட்டது.

ராகு—(1) குரூரசுபாவம்: இறக்கமில்லாதவன்: நோயாளி: யோக்யதை அற்றவன்.

(2) சண்டைக்காரன்: எதிர்த்துக் கொள்பவன்.

(3) பராக்ரமசாலி: தனவந்தன்.

(4) மனைவி முதலிய பெண்டுகளைச் சிறைவைப்பவன்.

(5) பயங்காளி: இரக்கமுள்ளவன்: ஏழை.

(6) நல்லகுலம்: விரோதிகளை ஜயிப்பவன்: தீக்காயுள்: அதிக சந்தோஷம் அனுபவிப்பவன்.

(7) கெர்வி: வீரர்களில் முதல்வன்: நோயினால் வருந்துபவன்.

(8) கஷ்டம்சகிப்பவன்: பொதுஜனநிந்தை யுள்ளவன்: செய்தொழிலில் ஆலஸ்யம்: நோயாளி.

(9) பிதுர்ப் பகையுள்ளவன்: கியாதியும், செல்வமும் உடையவன்.

(10) திருட்டுக்கு நவமணி: யோக்யதை அற்றவன்: சண்டைக்கு முதல்வன்.

(11) செவிடன்: யுத்தவீரன்: தனவந்தன்: படிப்பில் கியாதிபெற்றவன்.

(12) சபலன்: பிறந்த குடித்தனமும் பெயரையும் இழப்பவன்: கெட்ட நடையுள்ளவன்.

கேது—(1) சனியின் வீட்டில் (மகரகும்பத்தில்) தனத்தையும், புத்திரனையும் விருத்திசெய்யும்.

(2) பொதுஜனவிரோதி.

(3) நன்னடக்கை யுடையவன்: தனவந்தன்.

(4) அவதூறு பேசுகிறவன்: மற்றவர்களை நிந்திப்பவன்.

(5) வஞ்சகன்: தண்ணீரை அஞ்சுபவன்: அதிக நோயால் வருந்துபவன்.

(6) பந்துக்களுக்கினியன்: தர்மகுணப்பிரக்யாதி: புகழ் பெற்ற படிப்பாளி.

(7) கெட்ட மனைவி யுடையவன்: மனைவியால் சௌக்கிய மில்லாதவன்: தூக்கமுடையவன்: நாகரீக மில்லாதவன்: சோர்வுடன் பேசுபவன்: சதா சுற்றுகிறவன்: மடயன்.

(8) பிறர் மனைவியையும் பொருளையும் அனுபவிக்க இச்சிப்பவன்: நோயாளி, துர்நெறிவியாதி, பேராசை யுள்ளவன்: (சுபரால் பார்க்கப்பட்டால்) தனமும் ஆயுசும் உடையவன்.

(9) முன்கோபி: வாய்ச்சாலன்: துர்நடையன்: பிறர் தூஷணைசெய்பவன்: தைரியன்: தாய்தகப்பன் விரோதி: டம்பன்: சோம்பல் சினேகிதனை சேர்வன்: இறுமாப்புடையவன்.

(10) புத்திசாலி: வலிவுடையன்: கலைபயின்றவன்: தன்னையறிந்தவன்: ஜனமேகி: ஜனப்பிரியனாக நடப்பவன், சுபமுடையன்: திரிபவன்: தைரியத்தில் முதலாளி.

(11) பராக்ரமசாலி: மற்றவர்களிடத்தில் பட்சமுள்ளவன்: பிறரால் மதிக்கப்பட்டவன்: திருப்தியடைந்தவன்:அதிகாரி:அளவுடன் சுகிப்பவன்: நன்னெறி நற்செய்கையில் ஆசையுள்ளவன்.

(12) நிலையற்றவன்: அனுசாரமுள்ளவன்: தன்குடியின் பழய பெயரும் தனமும் இழப்பவன்.

இப்படி ராகு, கேதுக்கள் நிற்கும் பாவப்படி பலனுண்டாகும்என்றது தாற்பரியம்: ஆனால், தனிமையாக ஒருகிரகத்துடனும் சேராமலிருந்தாலும், திதியினால் சூன்ய பாவத்தில் இருந்தாலும் மேற்சொல்லிய பலன்கள் அதிகரிக்கும். இதன்றி, இவ்விரண்டு கிரகங்களும் நிற்கும் ராசிநாதன் திசை புக்திகளில் மேற்சொல்லிய பலன்கள் நடக்கும் காலம்.



# 9-ம் அத்தியாயம்



## நவக்கிரகம்



I. நம் விதிவிளக்கத்திற்கு, இப்போது காரண கர்த்தாக்களாக நாம் அனுஷ்டிக்கும் கிரகங்கள் ஒன்பது. அவை யாவன:—

(1) சூ. சந். செ. பு. கு. சு. சனி. ரா. கே. இவை ஒன்பதில் சந். பு. கு. சு. இவை சௌமியர் (அதாவது ஸம்ஸ்கிருத வார்த்தையாகிய "ஸௌம்ய" என்பதற்கு சாந்தமுள்ள, மிருதுவான, மிதமான என்று அர்த்தம்). அதுபோல, இக்கிரகங்கள் சௌமியர் என்றால் சாந்தம் அல்லது மிருது அல்லது மிதமான பலனை கொடுக்கிற சுபாவமுள்ளவர்களும், இயற்கையுள்ளவர்களும், என்று கொள்கை. மற்ற கிரகங்களாகிய சூ. செ. சனி. ரா. கேது, இவைகள் பாபகிரகமென்றும், குரூரர் என்றும், அழிவு, நாசம், கொலை, இவைகளுக்குக் கர்த்தர்கள் என்றும்சொல்லப்பட்டு வருகின்றன. ஆனால், முன்னமே சொல்லியபடி சிருஷ்டியில் பட்சபாத மில்லாமல் ஸ்தூலமாக இதுகெட்டதென்றும் இது நல்லதென்றும் எப்படி கிடையாதோ, அதுபோல் இந்தக் கிரகங்களும், பலன்களை நடத்துவதில், சில திதி யோகம் இவைகளில், சௌமியர் குரூரராகி விடுவதைப்போல் குரூரர் சௌமியர் ஆகி விடுகிறார்கள்.

பாபர்களோடு அல்லது ராகு கேதுக்களோடு, கூடிய சந்திரன் புதன், இவர்கள் குரூரராகி விடுகிறார்கள் என்றே விதிவிளக்கத்திற்குப் பொதுவாக மதிக்கவேண்டியது.

## II. சரம் - ஸ்திரம் - உபயம்

(அநுபந்தம்பார்க்க) பதக்கத்தில்காட்டிய சரம், ஸ்திரம், உபயம், என்னப்பட்ட ராசியின் சுபாவங்களை ஒருவாறு நன்றாய்த் தெரிந்தெடுக்க வேண்டும். அதாவது (1) சரராசியில் இருக்கப்பட்டகிரகங்கள், சரிதை, பொறுமை, தேசாந்தரவாசம், வழிநடக்கப்பிரியம், அநேகவிதமான கிரக நிலைஒன்றாக் கொன்று இருக்கப்பட்டதைப்போல், பாவ பலன் கெடுதல் செய்கின்றன. (2) ஸ்திரகிரகங்கள் - கெர்வம், தனம், வெகு கார்ய சீலத்துவம்,வெகு ஆயுள், இவைகளைக் கொடுக்கின்றன. (3) உபயராசி கிரகங்கள் - நற்குணம், அழகு, காரியத்தில் சூக்ஷமமான புத்தி, இவைகளைத்தரும். இவை பொதுபலன்கள். இவைகளைப்போல் கிரகங்கள் இருக்கப்பட்ட பாவம் கெதி (உச்ச நீசம் நட்பு பகை)என்று சொல்லப்பட்ட வலிவு போல் பலன் தருகின்றன.

## III. கிரக சுபாசுபம்

கிரகசுபப், அசுபம், ராசிவஸாத் ஏற்படுவதை இங்கு முக்கியமாக கவனிக்கத்தக்கது. (ஜாதக அலங்காரம்) (1) சுபர், (2) பாபர், (3) மாரகர் என்று சொல்லியிருப்பதை இங்கு கவனிக்கத்தக்கது. அவை வருமாறு:—

| | சுபர் | பாபர் | மாரகன் |
|---|---|---|---|
| மேஷம் | சூ—கு | சனி—சு—பு | சு |
| ரிஷபம் | சூ—சனி | கு—சு—சூ | சு—கு |
| மிதுனம் | சு | சூ—கு—செ | செ—கு—சூ |
| கடகம் | கு—செ | பு—சு | சூ |
| சிங்கம் | செ | சு—பு | கு—சு |
| கன்னி | சு | செ—சந்—கு | பு—சு |
| துலாம் | சனி—பு | செ—சூ—கு | செ |
| விருச்சிகம் | சந் | பு—செ | கு |
| தனுசு | செ—சூ | சு | சனி |
| மகரம் | பு—சு | கு—செ—சந் | சனி |
| கும்பம் | சு | கு—சந்—செ | பு—கு |
| மீனம் | செ—சந் | சனி—பு—சு—சூ | செ |

ஜெனனகால யோகத்தினால் கிரகங்களுக்கு யோகமோ அல்லது அவயோகமோ அமைகிறதினால், ஜாதக அலங்கா ரத்திலும் வருஷாதி நூலிலும் காட்டியிருக்கும் பொதுவான "யோகர்கள்" என்ற கிரகங்கள் இங்கே விடப்பட்டன. அவை விதிவிளக்கத்திற்கு மேல் சொல்லிய காரணத்தினால் உதவா.

## IV. காரகக் கிரகங்கள்

சூ— பிதுர்காரகன், சரீரகாரகன்.
சந்— மாதுர்காரகன்.
செ— சகோதரகாரகன்.
பு— வித்தியாகாரகன், மாதுலகாரகன்.
கு— புத்திரகாரகன், தனகாரகன்.
சு— களத்திர காரகன், வாகனகாரகன்.
சனி— ஆயுள்காரகன், தரித்திரகாரகன்.
ரா— பிதாமககாரகன், யோககாரகன், போககாரகன்.
கேது—மாதா மககாரகன், ஞானகாரகன், மோக்ஷகாரகன்,

இரவில் அதாவது ராத்திரி ஜெனனமாகில், சனி - பிதுர் காரகன், சந்-மாதுருகாரகன்.

பகலில் அதாவது சூரியன் அஸ்தமிக்குமுன் ஜெனன மாகில் சூ - பிதுர்காரகன், சு - மாதுர்காரகன்.

இக்கிரகங்கள், திதியினால் எப்படி குரூரராகின்றார்கள் என்றும், அல்லது சௌமியர் ஆகிறார்கள் என்றும் கவனிக்க வேண்டியது. இப்படியே யோகத்தினால் அவர்களுக்கு சூரி யன் யோகதாரை அமைகிறதா, அல்லது சந்திரவஸாத் ஏற் பட்ட யோகதாரை அமைகிறதா என்று கவனிக்கவேண்டி யது. இப்படிக் கவனிப்பதில், ஜாதகத்தில் ஏற்பட்ட சிலமுக்

கியமான, ஸ்தூல பலன்கள், ஆயுள் முழுமைக்கும் நடக்கும் பலன்கள், விளங்கும். இதை மறுபதிப்பில் உதாரணத்துடன் விளக்கலாம்.

பொதுவாக, உத்தராயண ராசிகளில் இருக்கும் கிரகங்கள் வலிவு பெற்றவை. அப்படியே தக்ஷிணாயின ராசியில் இருக்கும் கிரகங்கள், உத்தராயண ராசியில் இருக்கும் கிரகங்களில் சாயல்பெற்றால் அக்கிரகங்கள் உத்தராயணராசி கிரகங்கள் வலிவே பெறும்.

## V. பாசகன் - போதகன் - காரகன் - வேதகன்

சாதகஅலங்கார ஜோதிடசாஸ்திரம் இயற்றியவர், திசையைப் பற்றி சொல்லும் அதிகாரத்தில், யாதொரு திசைகிரகத்திற்குப் பலனையூகிக்கும்போது, நான்கு விதமான பலனைக் கவனிக்கவேண்டியதென்றும், அவைகளைப் பாசகம் போதகம் காரகம் வேதகம் என்று வகுத்திருக்கிறார்: அந்த நான்குவித பலனின் தாற்பரியம் என்னவென்றால் (1) பாசகன் - பலனை கூட்டுவிப்பவன்: (2) போதகன்-பலனைக் கொடுவென்போன். (3) காரகன் பலனைக்கொடுக்கிறவன். (4) வேதகன் - நடக்கும் பலனைத்தட்டுவிப்பவன்.

குமாரசுவாமியம் என்ற ஜோதிடசாஸ்திரத்தில், திசைக்கிரகம் நிற்கும் ஸ்தானத்திற்கும், பாசகாதிமுதலிய கிரகங்களின் ஸ்தானத்திற்கும் இருக்கவேண்டிய ஸ்தான எண்ணிக்கையை அதிக விமரிசையாய் காட்டியிருக்கிறது. இதை விதிவிளக்கத்திற்கு உபயோகிக்க அதிகபலன் தெளிவாகும். இதை ஒருபதக்கம் மூலமாக கீழேகண்டிருக்கிறது.

| கிரகப் பெயர் | பாசகன் | போதகன் | காரகன் | வேதகன் |
| --- | --- | --- | --- | --- |
| சூ | சனி 6 | செ 7 | கு 9 | பு 11 |
| சந் | சு 2 | செ 9 | சனி 11 | சூ 3 |
| செ | சூ 2 | சந் 9 | சனி 11 | கு 12 |
| பு | சந் 2 | கு 4 | சு 5 | செ 3 |
| குரு | சனி 6 | செ 5 | சு 7 | சூ 12 |
| சு | பு 2 | சூ 6 | சந் 12 | சனி 4 |
| சனி | சு 3 | சந் 11 | கு 6 | செ 7 |

இதில் பாசக கிரகத்தை அதிகமாக கவனிக்கவேண்டும். அந்தந்தக் கிரகங்களுக்குக் காட்டியிருக்கும் ராசிபாவத்தை யும், லக்கத்தையும் கவனிக்கவும். அதாவது ஜாதகத்தில் சூரியன் நின்ற ராசியிலிருந்து 6-ம் ராசியில் சனி நின்றால் சூரியனுக்கு பாசகன் சனி. சூரியனுக்கு 11-ல் நிற்கும் கிரகம் சூரியனுக்கு வேதகன். இப்படியே மற்ற கிரகங்களுக்கும் பார்க்கவும். பூர்வபாகம் அல்லது மேற்குப் பாகம், உத்தர பாகம் அல்லது கிழக்குபாகம், அதாவது மேஷத்திலிருந்து நாலாம்பாவம் கடகமும், மேஷத்திலிருந்து பத்தாம்பாவம் அல்லது பின்புறமாக நாலாம் ராசி மகரமும் ஆகும். இப்படி இருக்கப்பட்ட நிலைமையும் கவனித்து பாசகம், வேதகம் இவைகளை கவனிக்க வேண்டியது. அதாவது முன்பாகவும், பின்பாகவும் கணக்கிடல்.

மேலே காட்டியவை, திசை கிரகத்திற்கு சொல்லிய போதிலும், ஜாதகத்தில் நவக்கிரகங்கள் ஒன்றுக்கொன்று இந்த நிலையில் அமைந்தாலும், அந்த அந்தப் பாவபலன் ஜென்மகாலையில் விருத்தியாகி, பிறகு ஆயுள் காலத்தில் ராசிக்கு அமைந்த வலிமைபோல் அப்பாவபலன் குறைந்தும் மேம்பட்டும், நிற்கும். இதை ஒரு உதாரணத்தினால்விளக்கத் தெளிவாகும்.—புதன், யாதாமொரு ஜாதகத்தில் பாக்கியாதியாகி, போதகனுகிய குரு, புதனுக்கு நான்கில் நின்று, காரகனுகிய சுக்கிரன் குரு வீட்டில் அதாவது தனுசு மீனத்தில் அமர்ந்தால், பிதுர்ப்பாவம் விருத்தி; அதாவது, பிதுருடன் பிறந்தவர்கள் அனேகர். இப்படி ஒவ்வொரு பாவத்திற்கும் இருக்கப்பட்ட ஜெனனகால நிலையை கண்டறியலாம்.

இவ்விதமாகவே, கோசாரத்தில் கிரகங்கள் அமையும் போதும், திசை கிரகத்திற்குச் சொல்லிய கிரகங்கள் அவை நிற்கும் நிலையையும் கண்டு தற்கால பலனை அறியலாம். இவ்வாறு கண்டறியும்போது, ஜெனனகால லக்னஸ்புட திசையின் நிலையையும் கண்டு பலனை யூகிக்கலாம். இதை "விதி விளக்கமுறை" என்ற அதிகாரத்தில் காண்க.

இன்னும் குமாரஸ்வாமியம் என்ற சாஸ்திரத்தில் கண்டிருக்கும் திசை புக்தி ஒன்றுக்கொன்று சுபாவபகையை இங்கு கவனிக்கத்தக்கது. (1) சனி திசையில் செவ்வாய்காலம் பகை, (2) ராகு திசையில் புதன் காலம்பகை, (3) சூரிய திசையில் சுக்கிரன் காலம் பகை, (4) சந்திர திசையில் குரு காலம் பகை, (5) சுக்கிரன் திசையில் சூரியன் காலம் பகை, (6) கேது திசையில் சனி காலம் பகை, (9) புதன் திசையில் ராகு காலம் பகை. இதல்லாமல், மேல்காட்டிய பதக்கப்படி, சூரியன் ராசியாகிய சிம்மத்திற்கு 11-ம் ராசியாகிய மிதுனம்

வேதை, சந்திரன் ராசியாகிய கடகத்திற்கு, 3-ம் ராசி கன்னி வேதை. இப்படியே மற்ற ராசி வேதையையும் கவனிக்கவும்.

இவ்விதிகள் அதிக வலிவு உள்ளன என்பவற்றில் சந்தேகமில்லை; ஆயினும், சில ஜாதகங்களுக்கு, இவ்விதிகள் பொதுவாக திசைக்குப்பகை புத்தியைக் காண்பித்தபோதி லும், இப்புத்திகளே மேற்கண்ட திசை நடக்கும் கால், நல்ல பலனை விருத்திசெய்யும். (விதிவிளக்கத்தில் பொதுவாக பலனைக் கொடுக்குமென்றால், நல்ல பலனையும் கெட்டபலனை யும் கொடுக்க அதற்கு அதிகாரம் உண்டென்று கொள்ள வேண்டும். அதினால் ஏற்படுவதென்னவென்றால் சிருஷ்டி யின் அமைப்பில் பலனுக்கு அதிகாரம் உண்டென்று ஏற் படுங்கால் நல்ல பலனென்றும், கெட்ட பலனென்றும்; இடம் பொருள் கர்த்தா இவைகளால் ஏற்பட்டதே ஒழிய, ஸ்தூலமாகக் கெட்டதென்றும் நல்லதென்றும் கிடையா.) மேல்கண்ட விஷயங்களின் சார்பாக ஆராய்ச்சியில் ஏற்பட்ட தென்னவென்றால், வேதை அல்லது பகை புத்திகளாக அமைந்த கிரகங்கள், சந்திரன் வஸாத் ஏற்பட்ட யோக தாரையில் ஒன்றாகில், கெட்டபலனைக்கொடுக்க அதிகாரம் கிடையாது. யாதொன்றும் பலனைக்கொடுக்க வாய்ந்தன வாகையால், நல்ல பலனைக் கொடுப்பார்கள் - அதாவது திசைகிரக சார்பாக, திசை கிரக சுபாவகாரகம், பாவம் இதுகள் போல் பலனைக் கொடுப்பர்; இதை நன்றாக சிந்தித்து, ஜாதக நடப்பில் வருவனவற்றைக் கண்டறிந்து அங்கீகரிக்கவேண்டும்.

இப்படிக் கண்டறிவதினால் நமக்கு ஒரு முக்கியமான பிரயோஜனம் என்னவெனில், ஒரு வாழ்க்கைத் துணை நலத் தத்வம் ஏற்படுகிறது - அதாவது நல்லவைகளில் கெட்ட

தும், கெட்டவைகளில் நல்லதும், இராப்பகல் போல் ஒன்றின்பின் ஒன்றாகத் தொடர்ந்து மானிடப் பொதுவாழ்க்கையைநடத்தி, அதின் பொது இயல்பாகவும் தொன்றுதொட்டு வந்துக்கொண்டே யிருக்கிறது.

## VI. கிரகமும் ராசி பாவமும்

பொதுவாகச் சில கிரகங்களுக்குச் சில ராசி பாவம் நல்ல பலனையே தருமென்று ஏற்பட்டிருக்கிறது. இவை திதியினாலும், யோகத்தினாலும் எவ்விததோஷமும் அடையாமல் இருக்கவேண்டும் அப்படித் திதி அத்தியாயம், யோகாத்தியாயம், இவைகளில் சொல்லப்பட்ட குற்றம் நேரிடில், அவைகள் கெட்டபலனே கொடுப்பர்.

### கிரகங்களுக்கு வலிவுள்ள பாவங்கள்.

(1) புதனும்-குருவும்-உதயம் அல்லது லக்னத்தில்.

1 - குறிப்பு,—இவ்விரண்டு கிரகங்களும் ஜெனனகாலத்தில் அதாவது ஜெனித்த நாளன்று, உதயகதி அடைந்தால் சாதாரணமாக நல்ல யோகத்தைக்கொடுப்பர். இங்கே உதயம் என்றால் லக்னமல்ல. ஆனால், பஞ்சாங்கத்தில் காட்டியிருக்கும் கிரகஉதயம். ஆகவே, இவ்விஷயம் பஞ்சாங்கத்தில் ஏற்படும். ஜாதகத்தில் சில ஜோசியர் தவிர எல்லாரும் குறிப்பதில்லை.

(2) சுக்கிரனும், சந்திரனும்-நான்கில், அதாவது நாலாம் பாவத்தில், இப்பாவம் சரராசியாகில் நன்மை.

(3) சனியும் ராகுவும் - ஏழிலும்,

(4) சூரியன் செவ்வாய் பத்திலும்—வலியர்.

2-குறிப்பு:—மேலேகாட்டிய I-VI. ஆறுவிதமான ஜோதிடக்கொள்கைகளில், இவ்விதிவிளக்கத்தில், நட்பு பகை நீசம் என்ற கிரகநிலைமையை அதிகபாகக் கவனிக்காமல் அந்நிலை

மையைப்பற்றி ஒன்றும் சொல்லாததைப்பற்றியும் கவனிக்கவும். திதி யோகம் இவைகளால் அடையப்பெற்ற சக்தியினுல் அவைகளுக்கு உண்டாகும் வலிவு, பகை நீசம் இவைகளைவிட அதிகமாகும். ஆனுல், உச்சமும் ஆட்சிநிலைமையும் மாத்திரம் திதியினுலும் யோகத்தினுலும் உண்டாகும் நன்மை தீமை பலன்களை அதிகப்படுத்துகின்றன.

சில பாவங்களில், நவக்கிரகங்கள் நின்றுல் நல்ல பலனைத்தருகின்றன. அவை யாவன:—

சுக்கிரன் - சந்திரன் - கேது - செவ்வாய் - (6) ஆறில்.
ராகு - கேது - சூரியன் - சனி- (7) ஏழு.
ராகு - கேது - குரு - சுக்கிரன் - சூரியன்- (10) பத்து.
சூரியன் - குரு - சனி- (8) எட்டு.

மேற்சொல்லிய பாவங்களில் லக்னவசாத் அந்தந்த கிரகங்கள் சேர்ந்தோ தனிமையாகவோ நின்றுல் நல்ல பலனைக் கொடுக்கின்றன.

## VII. சூரிய சந்திர யோகம்

இதன்றியும், சூரியனும் சந்திரனும் ஒன்றுக்கொன்று வலிவு பெற்று, பரஸ்பர சம்பந்தமுண்டாகும்போது பிரபலமான வலிவு அடைகிறுர்கள். சில வேளைகளில் இதுவே ராஜயோகத்திற்குக் காரணம். சில உதாரணங்களால் இதை தெரிவிக்கலாம்.

(1) சூரியன் கடகத்தில் புனர்வசு நட்சத்திரத்தில் நின்றுல், சந்திரன் மீனம் அல்லது தனுசு ராசியில் நிற்பது.

(2) சூரியன் மிதுனத்தில் திருவாதிரையில் நிற்க, சந்திரன் உத்திராடத்தில் நிற்பது.

(3) சூரியன் பூரத்தில்நிற்க, சந்திரன் ரோகிணியில் நிற்பது.

(4) சூரியன் லக்னவஸாத் எட்டில் பூராடத்தில் நிற்க, சந்திரன் ரிஷபத்தில் ரோகிணியில் நிற்பது.

(5) சூரியன் கடகத்திலும், சந்திரன் சிம்மத்திலும்.

(6) சூரியன் விசாகத்திலும் சந்திரன் சிம்மத்திலும், மகத்தில் இருப்பது.

(7) சூரியன் உத்திரட்டாதியில், சந்திரன் மேஷத்தில் அசுவனியில்.

(8) சூரியனும் சந்திரனும் கடகத்தில்.

இவ்வாறே சூரிய திசையில் சந்திர புக்தியும், சந்திர திசையில் சூரிய புக்தியும் மிக்க வலிவுள்ளவை. அவை ஜெனனகால ஜென்மா நிலைமையை தெரிவிக்கின்றன.

## VIII. திதி கிரக பலன்

திதி சூன்யத்தில் அகப்பட்டகிரகங்களின் பலாபலன்:--

சூரியன்—திதியினால் சூன்யத்வம் அடைந்து, பிதுர்பாவத்தில் அமைந்தால், தாயுக்கு வாய்த்த இரண்டாவது புருஷனையும், தகப்பனுடன் பிறந்த ஜேஷ்ட பிதுரு அல்லது கனிஷ்ட பிதுரு இவைகளைக் காட்டும்; அதாவது இப்படிப்பட்ட பந்துகள் உண்டெனல். தாயுக்கு அமைந்த காந்தர்வ புருஷனைக் காட்டும். சூன்யத்வம் அடையாமல் சூன்ய ராசியில் நிற்க, சூரிய திசை பாதிக்கும்.

சந்திரன்—திதியினால் சூன்யத்வம் அடைந்து சூன்யராசியில்நின்றாலும், சூன்யத்வமடையாமல், சூன்யராசியில்நின்றாலும்தாயுடன் பிறந்தவர்கள் உண்டென்

றும், மாற்றுன் தாய் என்றும், தாய் இல்லை என்றும், தாயானவள் குடும்பத்தில் முதன்மையானவளும், விசேஷ நடையுள்ளவள் என்றும் ஏற்படும். சில ஜாதகத்தில் அதிர்ஷ்டஹீனத்தையும் காட்டும். ஆனல் திசை பாதிக்கும்.

செவ்வாய்-திதியினல் சூன்யமடைந்தாலும், பிராத்ருஸ்தானத்தில் அமைந்தாலும், எந்த ராசியிலாவது சூன்ய கிரகத்தினல் பார்க்கப்பட்டாலும், தகப்பனருக்கு முதல் தாரத்து பிள்ளை பெண்டுகளாகிய தமயன் தமக்கை உண்டென்று ஏற்படும்.

புதன்— திதி தோஷ மடையாமல் சூன்யராசியில் நின்ருல் மாமன் மாதுலன்வகை, ஜாதகன் வயது ஆக ஆக க்ஷீணதிசை யடையும். திதியினல் தோஷமடைந்தால், விஷ்ணு அம்சம் அல்லது விஷ்ணு கோத்திரத்தில் பிறந்தவர்கள் என்று ஏற்படும். திதிதோஷ மடையாமல் சூன்ய ராசியிலும் சுபராசியிலும் தனிமையாக நின்ருல் அந்த பாவம் மேன்மேலும் விருத்தி.

குரு— சூன்யதோஷமடையாமல் சூன்யராசியில் நின்ருலும், சூன்ய கிரகம் குரு வீட்டில் நின்ருலும் அப்படி குருநின்ற ராசிபாவம் முதலியவிருத்தியாகி பிறகு க்ஷீணமடையும், சூன்யதோஷ மடைந்தால், ஜாதகன் நல்ல நடக்கையுள்ளவனய் அடிக்கடி ஏகாதசி உபவாசம்இருப்பவனப் இருப்பான். தனிமையாய் நின்ருல் தான், இந்த பலன். வேறு கிரகத்தோடு சேர்ந்தால், அந்த கிரக பாவம்போல் பலன் நடக்கும். திதி சூன்ய கிரகமாகி குரு திசை நடந்தால் தரித்திர யோகம்.

சுக்கிரன்—சூன்ய தோஷமடைந்து சூன்யம் அல்லாத மற்ற சுபராசிகளில் அமைந்தால், களத்திரதோஷம்முத லில் உண்டாகி, பிறகு களத்திர விருத்தியாகும். அந்த பாவபலனும் முதல் முதல் விருத்தியாகி பின் கெடும். இதல்லாமல் கல்யாணமாகாத களத்திரம் ஆயுள் பரியந்தம் கூடவே வசிக்கும். சூன்யதோஷ மடையாமல் சூன்யராசியில் அமர்ந் தால் அதிகாரத்துடன் வெகுதூய ஸ்திரீகளை அணைவன்.

சனி— சூன்ய கிரகமாகி யோகவகையில் சூரிய நட்சத் திர வஸாத் அமைந்த ராசியில் நின்றால், லக்ன வஸாத் சனிக்கு அமைந்த பாவம் விருத்தியாகும். தன்காரக பாவமாகிய ஆயுளும் விருத்தியாகும். சூரியன் வீடாகிய சிம்மத்தில் நின்றாலும் இந்த பலனை தரும். சனிநிற்கும் பாவபலன் விருத்தி. சனி சூன்யதோஷ மடைந்து தன் வீட்டில் ஒரு சுபர் நிற்க தான் 11-ம் இடம் சேர்ந்தால் இந்த ஜாதகன் ஜேஷ்டனாக இருப்பான்.

குறிப்பு:—(1) சூன்ய கிரக திசை, (2) அல்லது சூன்ய ராசி கிரக சாயல் பெற்ற கிரகத்தின் திசை, எந்த பாவத்தில் அமைந்த போதிலும், கெட்ட பலனையே கொடுக்கின்றன. இவை வக்ரகதியில் நல்ல பலனை கொடுக் கின்றன.

குறிப்பு:—(2) நவக்கிரகங்கள், லக்னப்படி ஒரு யோக ஜென்மாவுக்குக் காரணமாக இருந்த போதிலும், சில கிரக திசைகளில் அதே ஜாதகத்தில் அவயோகம் நடக்கும். இதை எப்போதும் கவனிக்க வேண்டியது.

## IX. நித்ய திசை

நவக்கிரக பலன் நடக்கும் விதியை கவனிக்கும் போது, ஒரு ஜாதகன்பிறந்த தேதி அன்று சூரியன் சந்திரன் இவை நிற்கும் நட்சத்திர நிலையில் ஏற்படும், நித்ய திசை விளக்கம் மிகவும் உபயோகமாகிறது. இதை ஒரு உதாரணத்தினால் விளக்கலாம்.

நித்ய திசை விபரம்:— சூரியன் நின்ற நட்சத்திர முதல், அன்றைய நட்சத்திரம் வரை எண்ணிக் கண்ட தொகையை 2-ல் பெருக்கி, இதனோடு ஜெனன நட்சத்திர முதல், அன்றய நட்சத்திரம் வரையில் எண்ணிக் கண்ட தொகையும், ஞாயிறு முதல் அன்றைய வாரம் வரையுள்ள தொகையும் கூட்டி 9-ல் கொடுத்து வந்த மிச்சம் (1) சூரிய திசை, (2) சந்திரதிசை, (3) செவ்வாய்திசை, (4) ராகுதிசை, (5) குருதிசை, (6) சனிதிசை, (7) புதன்திசை, (8) கேது திசை (9) சுக்கிரதிசை-பதக்கம் பார்க்க.

சந் ராகு பு சு

| | | | |
|---|---|---|---|
| சூ | — | ※ செ | கே |
| சு—பு | ராசி | | குரு |
| — | | | ※ சனி சந்திர |
| ருகு | — | — | — |

சந் ரா பு சு

(இடப்புறம்: சூ, சூ; வலப்புறம்: கு, ச)

உதாரணம்:— ஜெனனம் ஆதிவாரம். லக்னம் மீனம், உத்திரட்டாதி 3-ல் சூரியன், மகம் 3-ல் சந்திரன், பிறந்ததிதி திரயோதசி. சூலநாம யோகம் — விசாகம் கிருத்தகை.

குறிப்பு:—சூன்யராசிகளை இக் * குறிப்பால் காட்டி யிருக்கிறது.

உத்திரட்டாதியிலிருந்து மகம் - 12.

12×2=24+1+1 = $\frac{26}{9}$ மிச்சம்-8 சூரியவசாத் கேது 8-வது திசை, மற்றதிரிகோண நட்சத்திரங்களுக் கும் இதுபோல் அமைக்கவும்.

| | | | |
|---|---|---|---|
| அசுவனி | —மகம் | —மூலம் | —கே |
| பரணி | —பூரம் | —பூராடம் | —புதன் |
| கிருத்திகை | —உத்திரம் | —உத்திராடம் | —சனி |
| ரோகணி | —அஸ்தம் | —திருவோணம் | —குரு |
| மிருகசீருஷம் | —சித்திரை | —அவிட்டம் | —ராகு |
| திருவாதிரை | —சுவாதி | —சதயம் | —செ |
| புனர்பூசம் | —விசாகம் | —பூரட்டாதி | —சந் |
| பூசம் | —அனுஷம் | —உத்திரட்டாதி | —சூ |
| ஆயில் | —கேட்டை | —ரேவதி | —சுக் |

ஒவ்வொரு நட்சத்திரத்தையும் ஜெனன நட்சத்திர மாக பாவித்து கணக்கிட்டு பார்த்தால், மேல் கண்ட பதக்கம் தெளிவாகும்.

இப்பதக்கத்திலிருந்து நாம் அறிவது என்னவென்றால், நட்சத்திர அதிகாரத்தில் சொல்லியபடி, பரணிக்கு (சு) இங்கேபுதன் வருகிறதுஅதாவது, சுக்கிரன் வீட்டிற்கு புத சாயல் என்று கொள்ளவேண்டியது. இதுபோலவே புனர் வசுக்கு சந்திர சாயல் என்றால் குரு வீட்டிற்கு சந்திரன் சாயல்என்றும் கொள்ளவேண்டியது. இப்படியே மற்ற ராசி களுக்கும் வைத்துக்கொண்டு அவரவர் திசை நடக்கும்

போது சாயல் கிரகபாவபலன் நடக்கும். மேல் காட்டிய பதக்கத்தில் சூரிய திசை நடந்த காலத்தில் விவாகம் புத்திரி முதலிய பலன் நடந்தன. சூரியன் மீனத்தில் நிற்க சந்திரன் சாயல் வந்தது. அந்த சந்திரன் பஞ்சமாதிபதியாகையாலும், குரு லக்னுதியாகி பஞ்சமத்தில் நின்றதினுலும் இந்த பலன். இதே விதமாக மற்ற பாவங்களுக்கும் கவனிக்கவும்.

மேற் சொல்லிய ஜாதகத்தில் யோகதாரகைகள், விசாகம்-கிருத்திகை. இதில் சூரியன் வசாத் ஏற்பட்டது விசாகம் (கு) ஆகையால், ராகு திசை நடந்தபோது அதிக யோகமும் பொருளும் கொடுத்தது. ராகு குரு வீட்டில் இருப்பதை கவனிக்கவும். (யோக அதிகாரம் பார்க்கவும்). ஆனுலும், குரு திசையில் இந்த ஜாதகன் மரணமடைந்தார். காரணமென்ன வென்றல், குரு, சூரிய வசாத் ஏற்பட்ட யோகாதிபாகியும், சந்திரன் வசாத் ஏற்பட்ட சூரியன் (யோகதாரை கிருத்திகை) லக்னத்தில் அதாவது குரு வீட்டில் நின்றதினுல், மாரகபலன். அல்லாமலும், சூன்ய கிரகமாகிய சூ, குரு, வீட்டில் நிற்பதை கவனிக்கவும். அதிக அற்புதமான இந்தயோக ரகசிய தத்துவத்தை, ஒவ்வொருவரும் கவனித்தால் சிருஷ்டியின் அற்புதம் விளங்கி, அனேக ஜோதிட சாஸ்திர சந்தேகங்களும் நிவர்த்தியாகும். சந்திர வசாத் அமைந்த கிரகமே சூன்யகிரகமாகில், அது நின்ற ராசி அதிபதி திசைமாரகம் செய்யும்.

# 10 - ம் அத்தியாயம்



## விதி விளக்கமுறை



ஒரு ஜாதகத்தை கணித்துப் பலன் கண்டறிய வேண்டுமானால், முதல் முதல் பிறந்த மணிநேரம், இடம், தேதி இவைகள் வேண்டும். ஆனால் மணி நேரமானது அதிக சரியானதாக இல்லாவிட்டாலும், ஏறக்குறைய பிசகில்லாமல் பார்க்கப்பட்ட மணிநேரமே போதுமானது. இயற்கையில் சூரிய வெளிச்சம் உதயத்திற்கு அரைமணி நேரத்திற்கு முந்தியே காணப்படுகிறது. அதுபோல, லக்ன ஆரம்பமும் இடத்துக்கிடம் வித்யாசம் ஏற்படும். ஆகையால் ஸ்தூலமாக இதை தப்பிதமாகக் கொள்ளாமல், கூடிய வரையில் சரியாகக் கணக்கெடுத்து நாம் ஜாதகம் பார்க்கிறோம். சில ஜோசியர், சிரசு உதயம் ஜெனனகாலமென்றும், சிலர் பூமியில் பிறந்த பிறகு ஜெனன காலமென்றும், சிலர் பிறந்த முதல் அழுகைக் குரல்காலமே, ஜெனனகாலமென்றும் கொள்கிறார்கள். இந்த அபிப்பிராய பேதம் நாம் கவனிக்க வேண்டியதில்லை. ஜோதிடமே, ஜோதிகணக்கில் அமைகிறதினாலும், ஜோதி ஆரம்பிக்கும் ஸ்தானமும், இருட்டு முடிவாகிற ஸ்தானமும் ஏற்படுவது எப்படி கஷ்டமோ, அதுபோலவே நம்முயற்சியும் கஷ்டமாக இருக்கிறது - இருந்தாலும் வெளிச்சம் வந்த உடன் சூரியன் உதயகாலம் ஆரம்பிக்கிறதென்று எப்படி நாம் தெளிகிறோமோ, அதுபோல், சிரசு உதய காலத்தை

ஜெனனகாலமாக கொண்டு லக்னம் கணித்து மேல் நடக்கப் போகிறவற்றை யூகிக்கலாம்.

## I. லக்ன ஸ்புடம்.

அதாவது லக்னத்தை இன்னதென்று நிச்சயித்தல். லக்னமாவது-பிறந்த இடம் மணி நேரத்தில் நாம் இருக்கும் இடத்திலிருந்து கிழக்கே நோக்க, பூமியும் ஆகாயமும் சந்திக்கும் இடம்—திக்அந்தமும், மறுபடியும் ராசிநிலை ஆகாயத்தில் கிழக்குமேற்காக கீறியிருப்பதாக வைத்துக்கொண்டு அந்தராசிநிலையும், திக் அந்தமாகிய பூமியும் ஆகாயமும் சந்திக்கும் இடமுமாகிய-ரேகை ஸ்தானமும்; இவ்விரண்டு நிலையும் சந்திக்கும் இடமே லக்னம். பூமி தன்னைத்தானே சுற்றுவதினால் யாதாமொரு மாதத்தில் கிழக்கே உதிக்கும் ராசியே உதயத்தில் லக்னமாகும். பகலும் இரவும் சேர்ந்து 24-மணி நேரமாகிறது. இரண்டுமணிநேரத்திற்கு ஒரு ராசிமுடிவாகிறதினால் பனிரண்டுராசியும் வரிசைகிரமப்படி லக்னமாக அமையும். பூமியானது மேற்கிலிருந்து கிழக்குபக்கமாக தன்னைத் தானே சுற்றுவது ஒருகதி. இதன்றி ராசிமண்டலத்தைசுற்றி வருவது ஒருகதி. அப்படி சுற்றி சூரியன் வீதி அல்லது ராசிமண்டலமாகிய 360-பாகை கொண்ட ஆகாசமண்டலத்தை ஒருசுற்று சுற்றி வருகிறது. சுற்றிவருவதற்கு காலம் ஒருவருஷம் அல்லது பன்னிரண்டு மாதங்களாகின்றன. ஆகவே மாதம் ஒன்றுக்கு 30-பாகை விழுக்காடு சுற்றிவருகிறது-பூமி மேல் சொல்லியவாறு தன்னை தான் சுற்றிக்கொண்டே சூரிய மண்டலத்தை சுற்றும்போது ஒருநாளைக்கு ஒருபாகைதூரம் சுற்றி வருகிறது. அதாவது நான்கு நிமிஷத்தில் ஒருபாகை தூரம் ராசியில் செல்கிறது. ஆகவே முப்பது பாகை கொண்ட ஒவ்வொரு ராசியிலும் சுமார் 120-(30×4) நிமிஷம் செல்கிறது. அதாவது இரண்டுமணிநேரத்தில் சுமார்

ஒரு ராசிமாறுகிறது. இந்த கணக்கு பூமத்திய ரேகைஸ்தானத்திற்கு சரிவரும். பூமத்திய ரேகைக்கு தெற்காகவும், வடக்காகவும் உள்ள இடங்களுக்கு இடம் கொஞ்சம் வித்தியாசம் ஏற்படும். சென்னையானது பூமத்ய ரேகைக்கு வடக்காக இருப்பதினால், ராசிமானம் பூமத்திய ரேகைஸ்தானத்திலிருந்து கொஞ்சம் வித்யாசப்படும். அதை கவனித்தே லக்ன கணிதம் செய்யவேண்டியது. லக்ன கணிதமுறை சிற்சில பஞ்சாங்கத்தில் காட்டிய விவரப்படி செய்தால் லக்னஸ்புடம் சரியாக இருக்கும்.

## "லக்னதிசை" கணிதம்

(1) ராசிமான சங்கிலை சென்னைக்கு வேண்டியது ஒன்று. அதையே உபயோகிக்க வேண்டியது. (ஆனந்தபோதினிபஞ்சாங்கத்தில் ஸ்ரீமுகவருஷ 54-வது பக்கம்பார்க்க.) மற்ற இடங்களுக்கு இடத்தின் அக்ஷாம்ஸம் கணிதம் போல் மாறும். அதையும் கவனித்தே லக்னகணிதம்செய்யவேண்டும். (2) இப்படி லக்ன கணிதத்தில் ஏற்படுவது உதயராசியும், அதில்சொல்லவேண்டிய நாழிகையும். இந்த நாழிகையை பாகை, கலை, விகலை, யாக்கிவைத்துக்கொள்ள வேண்டியது. ராசி ஒன்றுக்கு 30-பாகை ஆகையால், அந்த ராசியில் இன்னும் செல்லவேண்டிய பாகையை, பாகை ஒன்றுக்கு ஒரு வருஷமாக பாவித்து, சாதகம் பார்க்கும் காலத்தில் சென்ற வயதின் கணக்கு பிரகாரம், பாகையைத்தள்ளிபார்க்க ஜோதிடபலன் கணிக்கும் காலத்தில், லக்னதிசை எந்தராசியில் எந்த நட்சத்திரபாதத்தில் நடக்கிறதென்று ஏற்படும். அதாவது, ஒருஉதாரணமாக ஒருவன் மேஷம் - ஜெனனமாகி ஜெனனகாலத்தில் அதில் செல்லவேண்டியது பாகை 20-ஆக இருந்தால், ஒருவருக்கு 20 - வது வயசின் முடிவில், ரிஷபராசியில் கிருத்திகை இரண்டாம் பாதத்தில் சூரியன்

"லக்னதிசை" நடப்பதாக ஏற்படும்:—இப்படி கவனிப்பது லக்னதிசைமுறை.

குறிப்பு:—நம் இந்து கணித சாஸ்திரப்படி ஒரு தினம் சூரிய உதயத்தில் ஆரம்பமாகி, மறுஉதய நாழிகையில் முடிகிறது.

## II-கிரகதிசை ஸ்புடம்

இதை பிறந்தகால சந்திரன் இருக்கப்பட்ட நிலையிலிருந்து கணிக்க வேண்டியது. சரிவர கணிக்கப்பட்ட பஞ்சாங்கத்தை ஆதாரமாக வைத்துக்கொண்டு, பிறந்த மணிநேரம் அல்லது நாழிகையில் சந்திரனுக்கு அன்றைய தினம் ஏற்பட்ட ஆதியந்தம் மொத்த நாழிகையில் எவ்வளவு மிகுதி இருப்பதென்று கவனித்து, அந்த வீதம்போல் அந்த நட்சத்திரத்திற்கு அமைந்த திசை பாக்கி இருக்கும். இதிலிருந்து ஜோதிடம் பார்க்கும் காலம் வரையில் கணக்கிட்டு தற்கால திசைகாண வேண்டியது.

குறிப்பு:—இப்படி சந்திர வசாத் கிரக திசையும் லக்ன வசாத் திசை கிரகமும் ஒன்றேயாகில், சில முக்கியமான பலன்கள் பலிதமாகும். (நட்சத்திர அத்தியாயம் பார்க்க)

இவை இரண்டும் ஒன்றுக்கொன்று சம்பந்தம் இல்லாமலும், வேதையாகிலும் இருந்தால், அவை நல்ல பலனைக் கொடுக்கா. நடக்கும் பலனே வென்றால் லக்ன (தற்கால) திசை பாவம் போல் பலன் நடக்கும்.

## III. திதி வசாத் ஏற்பட்ட கிரகஸ்புடம்.

அதாவது திதியினால் சூன்ய கிரகதிசை நடப்பும், அல்லது, அப்படிப்பட்ட கிரகத்தின் புக்திநடக்கப்பட்டாலும், அந்த கிரகம் தற்காலம் கோசாரத்தில் இருக்கப்பட்ட அஸ்தங்கமோ, வக்ரமோ, உதயமோ என்னப்பட்ட கதியை கவனிக்க வேண்டியது. அவைகளின் தற்கால ராசி நிலையும் கவனிக்க வேண்டியது. சூரியனுக்கும், சந்திரனுக்கும் வக்ரகதியில்லை. ஆனால் சூன்யகிரகம் சம்பந்தம் அல்லது நட்சத்திர வஸாத் சூன்ய கிரக சாயல் அடைந்தால் அந்த சூரிய திசைபாதிக்கும். இப்படியே சந்திர திசைக்கும் பார்க்கவும். நீசமடைந்த கிரகம் திதி சூன்யராசியில் அமைந்து சுப கிரகமாயிருந்தால் அதின்பாவ பலன் விருத்தி. சூன்ய கிரகம், சுபனுகி, உச்சம் பெற்று திதி சூன்யராசி அல்லாத மற்ற ராசிகளில் கெட்டபாவத்தில் அமைந்தால் அதிக கெடுதல் பலனை கொடுக்கின்றன. அன்றியும், திதி உதய லக்னராசி நாதனுக்கு லக்னபடி ஏற்பட்ட பாவபலனையும் பொதுவாக கவனிக்க வேண்டியது.

## IV-யோகதாரை ஸ்புடம்.

யோக அதிகாரத்தில் விளக்கிய பிரகாரம், நடக்கும் திசை கிரகத்திற்கும், ஜாதகன் பிறந்தகால யோக ராசி அமைப்பிற்கும், என்ன சம்பந்தமென்று அறிய வேண்டும். சூரியன் வசாத் ஏற்பட்ட நட்சத்திரசாயல் கிரகம் பலன் யூகிக்கும் சமயத்தில், கோசாரத்தில் எங்கு இருக்கிறதென்றும் கவனிக்க வேண்டியதும். அனேகமாக, பலன் யோகதாரகையை பற்றியே நடப்பதினால், இதை

கவனித்தால் பலன் நடக்கும் தேதி முதலியவை தெளிவாக ஏற்படும். சந்திரன் வசாத் ஏற்பட்ட யோகதாரை க கிரக திசை நடந்தால் அனேகமான கெட்டபலனையே கொடுத்து கடைசியாக மாரகமும் செய்யும். இப்படிப்பட்ட திசை கிரகம் கோசரத்தில் எந்த பாவத்தில் செல்லுகிறதோ அந்த பாவத்தில் பலன் நடக்கும். மேல் நவக்கிரக அத்தியாயத்தில் நித்ய திசை விளக்கத்தில் காட்டிய உதாரணத்தை இங்கு கவனிக்கத்தக்கது.

குறிப்பு:—ஒரு ஜாதகன் பிறந்த காலத்தில் நடக்கும் யோகத்தையும், அதற்கு சமானமான பலனைக் கொடுக்கும் யோகத்தையும் கவனிக்க, ஜாதகனுக்கு பலன் நடக்கும் தினம் அனேகமாக தெளிவாகும். உதாரணம் ஒருவன் பிறந்த யோகம் விஷ்கம்பம் ஆனால் அவனுக்கு யாதாெனாரு பலன் அவன் ஆயுள் முழுமைக்கும் அனேகமாக கண்டம் நாமயோகம் - பரீகநாம யோகம் கூடிய தினத்தன்று நன்மை தீமை பலன்கள் அனேகமாக நடக்கும். இதனால் மற்ற யோகத்தில் பலன்கள் நடவா என்ற அபிப்பிராயமல்ல. ஆனால் ஒரு ஜாதகனுக்கு பலன் வெகுவாய் நடக்கும் கால நிர்ணயம் இதுவே.

விதிவிளக்கம் முற்றிற்று.



உ

# அனுபந்தம்



## (1) இராசிகள்—பனிரெண்டு

மேஷம் 1
ரிஷபம் 2
மிதுனம் 3
கடகம் 4
சிங்கம் 5
கன்னி 6
துலாம் 7
விருச்சிகம் 8
தனுசு 9
மகரம் 10
கும்பம் 11
மீனம் 12

(2) ஒற்றை அல்லது ஆண் ராசிகள்:—மேஷம்: மிதுனம்: சிங்கம்: துலாம்: தனுசு: கும்பம்.

இரட்டை அல்லது பெண் ராசிகள்:—ரிஷபம்: கடகம்: கன்னி: விருச்சிகம்: மகரம் மீனம்.

சரராசிகள்:—மேஷம்: கடகம்: துலாம்: மகரம்.

ஸ்திரராசிகள்:—ரிஷபம்: சிங்கம்: விருச்சிகம்: கும்பம்.

உபய ராசிகள்:—மிதுனம்: கன்னி: தனுசு: மீனம்.

(3)

| | | | |
|---|---|---|---|
| மீனம் குரு | மேஷம் செ | ரிஷபம் சு | மிதுனம் புத |
| கும்பம் சனி | ராசியும் கிரகமும் | | கடகம் சந் |
| மகரம் சனி | | | சிம்மம் சூ |
| தனுசு கு | விருச்சிகம் செ | துலாம் சு | கன்னி புத |

## (4) பாவத்தினால் ஏற்படும் பலன்கள்

லக்னரீதியாக ஏற்படும் பாவங்களும், அதாவது ராசிஸ்தானங்களும், அவைகளால் நாம் சாதாரண அனுபவத்தில் இதுவரையில் யூகித்துவரும் பலன்களும்.

### பலனகள்

லக்னபாவம்(1) உதயம்-கீர்த்தி - மூர்த்தி-தேகம்-நிறம்-தலை-வயசு: இந்த ஜன்மம்.

ஷை(2) நேத்திரம்-வாக்கு - தனம்-முகம்-குடும்பம்-வித்தை-கொடுக்கல்-வாங்கல்.

ஷை(3) சகோதரம்-வெற்றி-கீர்த்தி-கேள்வி-காது-தைரியம்-அடிமை-ஆபரணம்-கடன்-சமீபபிரயாணம்.

ஷை(4) தாய் - வாகனம் - பந்து - சுகம் - கல்வி - வீடு-தோட்டம்-பயிர்.

ஷை(5) புதல்வர் - புத்தி-முக்தி-மாதுலன்-பிதா-பிரபுத்வம்-பூர்வபுண்யம்-வெகுமானம்-விருந்து-கடிதம்.

ஷை(6) சத்துரு-ரோகம்-விரணம்-கோரம்-சிறை-பிரதாபம்-ஞாதி-பகை-வேலைக்காரர்-வழக்கு.

ஷை(7) களத்திரம் - காமம்-மாரகம்-விரோதம்-பிரதேசம்-விவாகம்-பங்குபாகம்-சண்டை-வழக்கு.

ஷை(8) ஆயுள் - நெடுநாள் வியாதி-மரணம்-பகை-ஜெயில்-அபகீர்த்தி-உயில் (மரணம் சாசனம்)

ஷை(9) பிதுர்-தர்மம் - பாக்கியம்-குரு-புண்ணியம்-இஷ்டதேவதை-தூரதேசப் பிரயாணம்-சாஸ்திரப்பயிற்சி.

௸(10) கருமம்-ஜீவனம்-ஆசாரம்-பொருள்வருத்து.

௸(11) லாபம்-மூத்தோன்-பரதார அனுபவம்.

௸(12) விரயம் - மோக்ஷம்-அன்னியதேச ஜீவனம் - ராஜதண்டனை-கைதி-குதிரைகள்-காணுவிரோதிகள்.

(5) நாழிகையை கலையாக்கும் பதக்கம்.

| | |
|---|---|
| 60-நாழிகை = 360-பாகை<br>1-நாழிகை = 6-பாகை<br>30-விநாடி = $\frac{1}{2}$-நாழிகை = 3 பாகை<br>15-விநாடி = $\frac{1}{4}$-நாழிகை = $1\frac{1}{2}$-பாகை | 60-விகலை = 1-கலை<br>60-கலை = 1-பாகை |

இப்படி கணக்கிட்டு லக்னத்தில் இருப்பு நாழிகையில் இருந்து அந்த லக்னத்தில் சொல்லவேண்டிய பாகை, கலை, விகலை, கணக்கிடவும்: ஒருபாகையை ஒருவருஷகாலமாக பாவித்து லக்னதிசையை ஜாதகனுக்கு சென்ற வருஷம் போல் கணக்கிடவும்.

உதாரணம்:—ஒருவன் மேஷம் 20-வது பாகையில் ஜெனித்தால் மேல் செல்லவேண்டிய பாகை 10-ஆகவே, 10-வயதுவரையில் லக்னதிசை,கார்—1—முடிவு. மேல் ரிஷபத்தில்—கார்த்திகை,—2-ஆரம்பம். இதுபோல் வயதுக்கு தக்கபடி கணக்கிடவும்.

(6) ஒரு நட்சத்திரத்தின் வியாபகம்-பாகை, கலை, விகலை யாகக்காட்டியது.

(1) முப்பது பாகை கொண்டது ஒரு ராசியாகையால், ஒரு ராசியில் ஒரு நட்சத்திரபாதம் நிற்கும் பாகை கலை விகலையைக் காட்டும் பதக்கம். (2) பாதம் ஒன்றுக்கு, 3-பாகை-20, கலையாகும்.

| | பாகை | கலை | |
|---|---|---|---|
| முதல்பாதம் I | 3 | 20 | (II) 30 பாகைக்கு=120-நிமிஷம் |
| ,, II | 6 | 40 | 1 பாகைக்கு= 4-நிமிஷம் |
| ,, III | 10 | 0 | ½ பாகை அல்லது 30 கலை } 2-நிமிஷம் |
| ,, IV | 13 | 20 | |
| ,, V | 16 | 40 | 15 விகலை=1 நிமிஷம் |
| ,, VI | 20 | 0 | |
| ,, VII | 23 | 20 | (III) ஒருநாழிகை =24-நிமிஷம் |
| ,, VIII | 26 | 40 | 30-விநாடி =12-நிமிஷம் |
| ,, IX | 30 | 0 | 15-விநாடி = 6-நிமிஷம் |

## தமிழ் வருஷங்கள்—60.

| | | | |
|---|---|---|---|
| பிரபவ— | சித்திரபானு- | ஹேவிளம்பி— | பரிதாபி |
| விபவ— | சுபானு— | விளம்பி— | பிரமாதீச |
| சுக்கில— | தாரண— | விகாரி— | ஆனந்த |
| பிரமோதூத— | பார்த்திப— | சார்வரி— | இராக்ஷச |
| பிரஜோற்பத்தி— | விய— | பிலவ— | நள |
| ஆங்கீரஸ— | சர்வசித்து— | சுபகிருது— | பிங்கள |
| ஸ்ரீமுக— | சர்வதாரி— | சோபகிருது— | காளயுக்தி |
| பவ— | விரோதி— | குரோதி— | சித்தார்த்தி |
| யுவ— | விக்ருதி— | விசுவாவ— | ரௌத்ரி |
| தாது— | கர— | பராபவ— | துன்மதி |
| ஈஸ்வர— | நந்தன— | பிலவங்க— | துந்துபி |
| வெகுதானிய— | விஜய— | கீலக— | ருத்ரோத்காரி |
| பிரமாதி— | ஜய— | சௌமிய— | ரத்தாக்ஷி |
| விக்கிரம— | மன்மத— | சாதாரண— | குரோதன |
| விஷு— | துன்முகி— | விரோதிகிருது-- | அக்ஷய |

## திதிகள்—15.

| | | | |
|---|---|---|---|
| பிரதமை | பஞ்சமி | நவமி | திரியோதசி |
| துதியை | சஷ்டி | தசமி | சதுர்த்தசி |
| திரிதியை | சப்தமி | ஏகாதசி | பௌர்ணமி அல்லது |
| சதுர்த்தி | அஷ்டமி | துவாதசி | அமாவாசை |

## நட்சத்திரங்கள்—27.

| | | |
|---|---|---|
| அசுவனி | மகம் | மூலம் |
| பரணி | பூரம் | பூராடம் |
| கார்த்திகை | உத்திரம் | உத்திராடம் |
| ரோகணி | அஸ்தம் | திருவோணம் |
| மிருகசீரிடம் | சித்திரை | அவிட்டம் |
| திருவாதிரை | சுவாதி | சதயம் |
| புனர்பூசம் | விசாகம் | பூரட்டாதி |
| பூசம் | அனுஷம் | உத்திரட்டாதி |
| ஆயிலியம் | கேட்டை | ரேவதி |

## யோகங்கள்—27.

| | | |
|---|---|---|
| விஷ்கம்பம் | கண்டம் | பரிகம் |
| பிரீதி | விருத்தி | சிவம் |
| ஆயுஷ்மான் | துருவம் | சித்தம் |
| சவுபாக்கியம் | வியகாதம் | சாத்தியம் |
| சோபனம் | அரிஷணம் | சுபம் |
| அதிகண்டம் | வச்சிரம் | சுப்பிரமம் |
| சுகர்மம் | சித்தி | பிரமம் |
| திருதி | விதீபாதம் | ஐந்திரம் |
| சூலம் | வரியான் | வைதிருதி |

## கரணங்கள்—11.

| | | |
|---|---|---|
| பவம் | கரசை | சதுஷ்பாதம் |
| பாலவம் | வனசை | நாகம் |
| கௌலவம் | பத்திரை | கிமிஸ்துக்கினம் |
| தைதுலை | சகுனி | |

---

## (7) திசைபுக்தி விபரம்-திசைபுக்தி மொத்தம்

| புக்திகள் | ௵ | ௴ | நாள் | மொத்தம் ௵ | ௴ | நாள் |
|---|---|---|---|---|---|---|
| **சூரிய திசை 6-க்கு** | | | | | | |
| சூரியன் | | 3 | 18 | | 3 | 18 |
| சந்திரன் | | 6 | | | 9 | 18 |
| செவ்வாய் | | 4 | 6 | 1 | 1 | 24 |
| இராகு | | 10 | 24 | 2 | | 18 |
| குரு | | 9 | 18 | 2 | 10 | 6 |
| சனி | | 11 | 12 | 3 | 9 | 18 |
| புதன் | | 10 | 6 | 4 | 7 | 24 |
| கேது | | 4 | 6 | 5 | | |
| சுக்கிரன் | 1 | | | 6 | | |
| **சந்திர திசை 10-க்கு** | | | | | | |
| சந்திரன் | | 10 | | | 10 | |
| செவ்வாய் | | 7 | | 1 | 5 | |
| இராகு | 1 | 6 | | 2 | 11 | |
| குரு | 1 | 4 | | 4 | 3 | |
| சனி | 1 | 7 | | 5 | 10 | |
| புதன் | 1 | 5 | | 7 | 3 | |
| கேது | | 7 | | 7 | 10 | |
| சுக்கிரன் | 1 | 8 | | 9 | 6 | |
| சூரியன் | | 4 | | 10 | | |
| **செவ்வாய் திசை 7-க்கு** | | | | | | |
| செவ்வாய் | | 4 | 27 | | 4 | 27 |
| இராகு | 1 | | 18 | 1 | 5 | 15 |
| குரு | | 11 | 6 | 2 | 4 | 21 |
| சனி | 1 | 1 | 9 | 3 | 6 | |
| புதன் | | 11 | 27 | 4 | 5 | 27 |
| கேது | | 4 | 27 | 4 | 10 | 24 |
| சுக்கிரன் | 1 | 2 | | 6 | | 24 |
| சூரியன் | | 4 | 6 | 6 | 5 | |
| சந்திரன் | | 7 | | 7 | | |

| புக்திகள் | வரு | மா | நாள் | மொத்தம் வரு | மொத்தம் மா | மொத்தம் நாள் |
|---|---|---|---|---|---|---|
| **இராகு திசை 18-க்கு** | | | | | | |
| இராகு | 2 | 8 | 12 | 2 | | 12 |
| குரு | 2 | 4 | 24 | 5 | 8 | 6 |
| சனி | 2 | 10 | 6 | 7 | 11 | 12 |
| புதன் | 2 | 6 | 18 | 10 | 1 | |
| கேது | 1 | | 18 | 11 | 6 | 18 |
| சுக்கிரன் | 3 | | | 14 | 6 | 18 |
| சூரியன் | | 10 | 24 | 15 | 6 | 12 |
| சந்திரன் | 1 | 6 | | 16 | 5 | 12 |
| செவ்வாய் | 1 | | 18 | 18 | | |
| **குரு திசை 16-க்கு** | | | | | | |
| குரு | 2 | 1 | 18 | 2 | 1 | 18 |
| சனி | 2 | 6 | 12 | 4 | 8 | |
| புதன் | 2 | 3 | 6 | 6 | 11 | 6 |
| கேது | | 11 | 6 | 7 | 10 | 12 |
| சுக்கிரன் | 2 | 8 | | 10 | 6 | 12 |
| சூரியன் | | 9 | 18 | 11 | 4 | |
| சந்திரன் | 1 | 4 | | 12 | 8 | |
| செவ்வாய் | | 11 | 9 | 13 | 7 | 6 |
| இராகு | 2 | 4 | 24 | 16 | | |
| **சனி திசை 19-க்கு** | | | | | | |
| சனி | 3 | | 3 | 3 | | 3 |
| புதன் | 2 | 8 | 9 | 5 | 8 | 12 |
| கேது | 1 | 1 | 9 | 6 | 9 | 21 |
| சுக்கிரன் | 3 | 2 | | 9 | 11 | 27 |
| சூரியன் | | 11 | 12 | 10 | 11 | 8 |
| சந்திரன் | 1 | 7 | | 12 | 9 | 3 |
| செவ்வாய் | 1 | 1 | 9 | 13 | 7 | 12 |
| இராகு | 2 | 10 | 6 | 16 | 5 | 18 |
| குரு | 2 | 9 | 12 | 19 | | |

| புக்திகள் | ௵ | ௴ | நாள் | மொத்தம் ௵ | மொத்தம் ௴ | மொத்தம் நாள் |
|---|---|---|---|---|---|---|
| **புதன் திசை 17-க்கு** | | | | | | |
| புதன் | 2 | 4 | 27 | 2 | 4 | 27 |
| கேது | | 11 | 27 | 3 | 4 | 24 |
| சுக்கிரன் | 2 | 10 | | 6 | 2 | 24 |
| சூரியன் | | 10 | 6 | 7 | 1 | |
| சந்திரன் | 1 | 5 | | 8 | 6 | |
| செவ்வாய் | | 11 | 27 | 9 | 5 | 27 |
| இராகு | 2 | 6 | 18 | 12 | | 15 |
| குரு | 2 | 3 | 6 | 14 | 3 | 21 |
| சனி | 2 | 8 | 9 | 17 | | |
| **கேது திசை 7-க்கு** | | | | | | |
| கேது | | 4 | 27 | | 4 | 27 |
| சுக்கிரன் | 1 | 2 | | 1 | 6 | 27 |
| சூரியன் | | 4 | 6 | 1 | 11 | 27 |
| சந்திரன் | | 7 | | 2 | 6 | 3 |
| செவ்வாய் | | 4 | 27 | 2 | 11 | 3 |
| இராகு | 1 | | 18 | 3 | 11 | |
| குரு | | 11 | 6 | 4 | 10 | 18 |
| சனி | 1 | 1 | 9 | 6 | | 24 |
| புதன் | | 11 | 27 | 7 | | |
| **சுக்கிர திசை 20-க்கு** | | | | | | |
| சுக்கிரன் | 3 | 4 | | 3 | 4 | |
| சூரியன் | 1 | | | 4 | 4 | |
| சந்திரன் | 1 | 8 | | 6 | | |
| செவ்வாய் | 1 | 2 | | 7 | 2 | |
| இராகு | 3 | | | 10 | 2 | |
| குரு | 2 | 8 | | 12 | 10 | |
| சனி | 3 | 2 | | 16 | | |
| புதன் | 2 | 10 | | 18 | 10 | |
| கேது | 1 | 2 | | 20 | | |

ஆர். ஜி. அச்சுக்கூடம், சென்னை.